





# திருச்சி மாவட்டம் கொப்பமாபுரி
# ஸ்ரீ இராமாஸ்ரம வரலாறு

(வரலாறுகளும்-அறிவுரைகளும்-துதிகளும்)

(முற்பகுதி)



தொகுத்தவர்கள்

வரலாறுகள்—ஸ்ரீ. C. N. ஆதிசேஷ ஐயர்

அறிவுரைகள் - துதிகள்
ஸ்ரீ குரு-மகா-கோவிந்த சுவாமிகள்

வெளியீடு

ஸ்ரீ இராமாஸ்ரமம் - கொப்பமாபுரி

வெளியிட்டோர்

சிருங்ககிரி-ஸ்ரீ சாரதாபீடம்-ஆஸ்தான வித்வான்
புலவர்மணி-தமிழிசைமணி-சாஹித்ய கலாநிதி

ஸ்ரீ. C. N. ஆதிசேஷ ஐயர்

**1974**



## திருச்சி மாவட்டம் கொப்பமாபுரி

# ஸ்ரீ இராமாஸ்ரம வரலாறு

(வரலாறுகளும்-அறிவுரைகளும்-துதிகளும்)

(முற்பகுதி)

தொகுத்தவர்கள்

வரலாறுகள் — ஸ்ரீ. C. N. ஆதிசேஷ ஐயர்

அறிவுரைகள் - துதிகள்

ஸ்ரீ குரு-மகா-கோவிந்த சுவாமிகள்

வெளியீடு

ஸ்ரீ இராமாஸ்ரமம் - கொப்பமாபுரி

வெளியிட்டோர்

சிருங்ககிரி-ஸ்ரீ-சாரதாபீடம்-ஆஸ்தான வித்வான்
புலவர்மணி-தமிழிசைமணி-சாஹித்ய கலாநிதி

ஸ்ரீ. C. N. ஆதிசேஷ ஐயர்

1974



ஸ்ரீ இராமாஸ்ரமம் கர்ப்ப கிரகத்தில் உள்ள
ஸ்ரீ இராமச்சந்திரபகவான் சித்திரத்தோற்றம்.



# கொப்பமாபுரி

# ஸ்ரீ இராமாஸ்ரம வரலாறு

## முதற்பகுதி வரலாறுகள்

மங்கலம்

### கொப்பமாபுரி - ஸ்ரீ பஞ்சமூர்த்திகள் துதி

எழுசீர் ஆசிரிய விருத்தம்

சீர்மிகுந் திலங்கும் கொப்பமா புரியார்
திருத்தல நடவிநா யகனைத்
தார்மிகுஞ் சண்மு கேசனைப் பதியாம்
சத்தரி ஷீசுர இறையைப்
பேர்மிகுங் குங்கு மாம்பிகை யனையைப்
பேணுசின் முத்திரை காட்டும்
தேர்மிகும் ஆதி பரமசற் குருவாம்
தெக்ஷிணு மூர்த்தியைப் பணிவாம்.

### ஸ்ரீ இராமச்சந்திர பகவான் துதி

திருமிகும் அயோத்தி தோன்றிநல் வசிட்டர்
திருமொழி ஏற்றுமா சீதை
திருமணம் ஆர்ந்து வனமுற அனுமார்
சேர்வுற அரக்கரை மாய்த்துத்
தருமரைப் புரந்து மருவும யோத்தி
தகுமகு டாபிஷே கமுறக்
குருவுமாய்க் கரச்சின் முத்திரை காட்டிக்
குலவுமி ராமர்தாள் போற்றி.

---

## நூல்

# 1. ஸ்ரீ இராமாஸ்ரம வரலாறு

நாட்டுச் சிறப்பு:

திருவருள் மிகுந்த இறைவனது அருளாட்சியுற்று விளங்கும் கடல் புடை சூழ்ந்த நெடுநில வுலகிலே, தெய்வ ஆலயங்களும் தெய்வங்கொள்கையிற் சிறந்த சான்ரோர்களும் மிகுந்து தெய்வீக அருட்செல்வம் பொருந்தி விளங்கும் நாடு இந்திய நாடேயாகும் என்பது உலகப் பிரசித்தமானதேயாம்.

ஊர்ச் சிறப்பு:

இத்தகைய பெருமை பொருந்திய இந்திய நாட்டின் தென் பகுதியில் இருக்கும் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ள துறையூர் வட்டத்தில் அகண்ட காவிரி நதிக்கு வடபால் மூன்றுகாத (30 மைல்) தூரத்தில் கொப்பமாபுரி என்னும் ஊர் அமைந்துள்ளது.

இந்தக் கொப்பமாபுரியானது கிழக்குப்புறம் ஐந்து கல் தொலைவில் மரகதகிரியென்னும் பச்சைமலையும் மேற்குப்புறம் ஐந்துகல் தொலைவில் *சதுரகிரியென்னும் கொல்லிமலையும் அரண்கள் போன்று அமையப் பெற்று அவற்றின் மத்தியில் இருப்பதால் 'மத்தியாசல க்ஷேத்திரம்' என்னும் சிறப்புப் பெயராலும், பூர்வம்

---

* சதுரகிரியென்னும் மலைக்குக் கொல்லிமலை என்னும் பெயர் அமைந்ததற்குக் காரணம், இந்த மலையில் 'கொல்லிப்பாவை' என்னும் காவல் தெய்வம் அமைந்துள்ளதேயாகும்; என்று வரலாற்று நூல்களில் கூறியிருக்கின்றது.

வில்வமரங்களடர்ந்த வனஞ்சூழ்ந்திருந்த சிவாலயம் அமைந்துள்ளதாய் இருப்பதால் 'வில்வாரண்ணிய சிவராஜபுரி' என்னும் சிறப்புப் பெயராலும் வழங்கப் பெறுவது. ஸ்ரீஇராமச்சந்திர மூர்த்தியால் உண்டாக்கப் பெற்ற இராமநதி யென்னும் புண்ணியநதி தீரத்தில் அமைந்துள்ள சிறப்பிணையுடையது. அருட்கடலாகிய

---

சங்க நூல்களாகிய புறநானூறு, குறுந்தொகை, சிந்தாமணி, சிலப்பதிகாரம், நற்றிணை முதலிய நூல்களில் கூறப் பெற்றுள்ள கொல்லிப்பாவை அமைப்பின் வரலாற்றுச் சுருக்கம் வருமாறு.

கொல்லிமலை வரலாற்றுச் சிறப்புக்கள் பெற்றது. பூமி மட்டத்திலிருந்து சுமார் நாலாயிரம் அடிகள்உயரம் உள்ளது. கொல்லி மலையின் மேலுள்ள சில இடங்கள் சம தளமாக அமைந்துள்ளன.

இம்மலையின் மேல் நல்ல காய்கனிகளும் தேன் முதலியவைகளும் மிகுதியாகக் கிடைக்கும். ஆகவே தனித்திருந்து தவம் செய்ய விரும்பும் துறவிகள் தங்கித் தவம் ஆற்றுதற்குத் தகுந்த இடமாயும் இது விளங்குகின்றது. ஆகவே பண்டைக் காலத்தில் முனிவர் பலர் சென்று இம்மலையில் தவம் செய்து கொண்டிருந்தனர். அவர்கள் தவம் செய்வதைக் கண்டு பொறுமை கொண்ட தீயவர்கள் பலர், அம்முனிவர்களைத் துன்புறுத்தலாயினர். அத்தீயவர்கள் துன்புறுத்தியதால் முனிவர்களின் தவம்தடைப்பட்டது. ஆகவே அந்த முனிவர்கள் அத்தீயவர்களைக் கொல்வதற்காகத் தங்கள் உபாசனு தெய்வசக்தியினுல் கொல்லிப்பாவை என்னும் பெயருடைய ஒரு உருவத்தை யமைத்தனர். அவ்வுருவம் ஒப்பற்ற பெண் போன்றே விளங்கியது. தீயவர்கள் அங்கு வரும் போது அது நகைக்கும் திறம் பெற்றிருந்தது. அத்தீயவர்கள் அதைக் காணும்போது அவர்களின் கண்களைக் கவர்ந்து கொல்வதாக இருந்தது. இவ்வாறு கொல்

இறைவன் திரு ஆலயங்கொண்டு அருளாட்சிபுரியும் மகத்துவமுடைய புண்ணியத்தலங்கள் பலவற்றில் ஒன்றுனது. 1. வசிட்டர், 2. விசுவாமித்திரர், 3. பரத்துவாசர், 4. காசிபர், 5. அத்திரி, 6. கௌதமர், 7. சமதக்கினி என்னும் சத்த (ஏழு) ரிஷிகளாலும், ஸ்ரீ இராமச்சந்திரமூர்த்தியினுலும் பூஜிக்கப் பெற்றுச் சிவலிங்கவுருவாய் இறைவன் எழுந்தருளியிருப்பதாய் உள்ள ஸ்ரீகுங்கு மாம்பிகா சமேத சத்த ரிஷீசுவரசுவாமி திரு ஆலயம் அமைந்துள்ள சிறப்பினையுடையது. அறப்பண்புடைய மக்கள் பலராலும் ஆலய வழிபாடு அன்னதானம் முதலிய அறங்கள் பலவும் ஆற்றப் பெறும் சிறப்பினையுடையதாக அமைந்துள்ளது.

## ஸ்ரீ இராமாஸ்ரம வரலாற்றுச் சிறப்பு

இத்தகைய சிறப்புக்கள் அமைந்த கொப்பமாபுரியில் உள்ள ஸ்ரீகுங்குமாம்பிகா சமேத சத்தரிஷீசுவர சுவாமி திரு ஆலயத்திற்கு வடமேல்புறத்தில் ஸ்ரீஇராம ஆசிரமம் என்னும் சிறந்த ஆசிரமம் அமைந்துள்ளது.

இந்த ஆசிரமமானது இவ்வூரிலுள்ள ஸ்ரீ இராம ருக்மணியம்மையார் அவர்களால் சிறந்த முறையில் அமைக்கப்பெற்றது. அவர்களால் பூர்வகாலம் முதல் பூஜைகள் புரிந்துவரப் பெற்ற ஸ்ரீ இராமர் பட்டாபிஷேக சித்திரமூர்த்தம், ஸ்ரீ விநாயகர் சித்திர மூர்த்தம்

---

லிப் பாவையானது தங்களைக் கொல்லுவதை யறிந்த அத்தியவர்கள் அங்கு வருவதற்குப் பயந்து வராமல் ஒழிந்தனர். ஆகவே முனிவர்கள் கவலையின்றித் தவம் ஆற்றினர். இவ்வாறு கொல்லிப்பாவை அமைந்த காரணத்தால் இம் மலைக்குக் கொல்லிமலை என்னும் பெயர் அமைந்தது என்பதாம்.

முதலிய தெய்வ மூர்த்தங்கள் ஸ்தாபனஞ் செய்யப் பெற்றது. இது பிற்காலங்களில் அவர்களது குடும்பத் தினரின் விருப்பப்படி தெய்வ உருவங்களை ஸ்தாபனம் செய்து பூஜைகள் நடைபெறச் செய்து கொள்ளலாம் என்னும் குறிக்கோளில் அமைக்கப் பெற்றதாயும், அவர்களால் பூஜைகள் நடைபெறுவதற்குரிய விளை நிலங்கள் அளிக்கப் பெற்றதாயும் அமைந்துள்ளது.

இந்த ஆசிரமமானது பூர்வ காலத்தில் ஸ்ரீஇராமச் சந்திர மூர்த்தியானவர் இங்கு வந்து இருந்து மேற் கூறியவாறு இராமநதியை யுண்டாக்கி அதில் தீர்த்த மாடி,அத்தீர்த்தத்தினல் தளிகை சமைத்து நிவேதனஞ் செய்து, ஸ்ரீ குங்குமாம்பிகா சமேத சத்தரிஷீசுவர சுவாமியைப் பூசனை புரிந்து தங்கிய காலத்தில்,அவரது திருப்பாதம் பொருந்திய ஸ்தலத்தில் அமைந்துள்ள சிறப்பினையுடையதாக ஆராய்ச்சியின் மூலம் அறியப் பெறுகின்றது.

மற்றும் இந்த ஆசிரமமானது பூஞ்சோலைகள் சூழப்பெற்றதாயும், ஏகாந்த வாசமாக இருந்து இறை வணத் தியானம் செய்து கொண்டு வருவதற்குத்தகுதி யானதாயும் அமைந்துள்ளது.

இத்தகைய ஸ்ரீ இராம ஆசிரமத்தில் ஸ்ரீ இராமச் சந்திர பகவானுக்கு நித்திய பூசனைகளும், நைமித்திக பூசனைகளும், ஸ்ரீ இராமநவமி முதலிய விசேட காலங் களில் விசேட பூசனைகளும், சகஸ்திரநாம அர்ச்சனை, இலக்ஷார்ச்சனை முதலிய விசேட அர்ச்சனை வழிபாடு களும், அறிஞர்களின் சொற் பொழிவுகளும் சிறப்புற நடைபெற்று வருகின்றன.

---

## 2. ஸ்ரீ இராமாஸ்ரமத்தில் ஏகாந்த வாச தியானம் செய்வதற்காகத் தங்கும் ஸ்ரீ குரு-மகா கோவிந்தசுவாமிகள்

### வரலாறு (சுருக்கம்)

*நாடும்-ஊரும்*

திருப்பதிகளாகிய தேவாலயங்களும் தெய்வபக்தி யிற் சிறந்த ஞானிகளாகிய சான்றோர்களும் மிகுந்து விளங்குதலால் தெய்வீக அருட்செல்வம் பொருந்திச் சிறந்து விளங்கும் இந்திய நாட்டின் தென்பகுதியில் உள்ள இராமநாதபுரம் மாவட்டம் ஸ்ரீ வில்லிபுத்தூர் வட்டத்தில் இராஜபாளையம் என்னும் ஊர் அமைந் துள்ளது. 'இராஜபாளையம்' என்பதன் பொருள் க்ஷத்திரிய குலத்து அரசர்களாகிய இராஜாக்கள் பாளையம் என்னும் படைகளுடன் ஆட்சி புரிந்து வந்த ஊர் என்பதாகும். இவ்வூரானது கிழக்குத் திசையில் கிழக்கு மலைத் தொடரும், மேற்குத் திசையில் மேற்கு மலைத் தொடரும் அரண்கள் போன்று அமையப் பெற்று, நீர்வளம் நிலவளம் முதலிய வளங்களுடன் சிறப்புற விளங்குவதாகும்.

*ஜனனம்*

இத்தகைய பெருமை பொருந்திய இராஜபாளையம் என்னும் ஊரில் உள்ள சக்கரராஜாக்கோட்டை என் னும் பகுதியில் வைணவர்களாயும், சைவ வைணவ சமரசக் கருத்தினராயும், தெய்வ பக்தியில் சிறந்தவர் களாயும், ஆந்திர மொழியினராயும், அறவள்ளல்களா யும் உள்ள சூரியவம்ச க்ஷத்திரிய குலத்து அரசர்

களாகிய இராஜ பரம்பரையினரில், குமாரராஜா என்பவர் சிறந்து வாழ்ந்து வந்தனர். அவர் மிகுந்த தெய்வபக்தியுடையவராய் நாள்தோறும் ஆலய வழிபாடுகளும், யோகஞான சாத்திரங்களைப் பயின்று தியானுதிகளும் செய்துவந்தனர். அவர் தமது மனைமாட்சியிற் சிறந்த இராஜாம்பாள் அம்மையார் என்னும் தரும பத்தினியாருடன் இல்லறத்தை நல்லறமாக நடைபெறச்செய்து கொண்டு வந்தனர். அவர்கட்குப் பகவானது திருவருளினுல் கலியுகாதி வருஷம் 5010-க்குச் சரியான சாலிவாகன வருஷம் 1831, ஆங்கிலம் 1908ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 13ஆம் தேதி, தமிழ் கீலக வருஷம் ஆடி மாதம் 29ஆம் தேதி குருவாரம் உதயாதி நாழிகை 31-விநாடி 47க்குச் சரியான மாலை மணி 6, நிமிஷம் 42, அமர பக்ஷம், துவிதியை திதி, சதய நக்ஷத்திரம், கும்ப லக்கினம் கூடிய சுப வேளையில் தவப்புதல்வர் ஜனன மாயினர்.

## நாமகரணமும் கல்வியும்

இவ்வாறு தவப்பயனுகப் பிறந்த புத்திரருக்குத் தாய் தந்தையர்களாகிய தம்பதிகள் நன்னுளில் 'கோவிந்தராஜர்' என்னும் பெயர் அமைத்துச் சிறப்புற வளர்த்து வந்தனர்.

அதன்பின்பு ஐந்தாம் வயது நிகழுங்காலத்தில் பள்ளிக்கூட ஆசிரியர்களிடம் அனுப்பி, ஆந்திர மொழியையும் தமிழ் மொழியையும் ஆங்கில மொழியையும் 17 வயதுவரை கற்கும்படி செய்தனர்.

இவ்வாறு கோவிந்தராஜர் 17வயதுவரை சிரத்தையுடன் ஆந்திரம், தமிழ், ஆங்கிலம் என்னும் மூன்று மொழிகளைக் கற்றுத் தேர்ச்சியடைந்தனர்.

### தெய்வ பக்தியும் பக்தி ஞான சாத்திரங்களைப் பயிலுதலும்

இவ்வாறு கோவிந்தராஜர் கல்வி கற்றுக்கொண்டு வந்த கால முதலாகத் தமது குலதெய்வமாகிய ஸ்ரீ இராமச்சந்திர பகவானை உபாசனா மூர்த்தியாகக் கொண்டு சிறந்த முறையில் பூசனைகள் புரிந்துகொண்டும், தமது மனையின் அருகில் அமைந்திருந்த ஸ்ரீ இராமச்சந்திர பகவானது ஆலயத்தில் சென்று பல பக்தர்களுடன் பஜனைகள் புரிந்து கொண்டும், சிறந்த பக்தி நெறியில் ஈடுபட்டுக்கொண்டும், இருந்ததுடன், பிறப்பு இறப்பு முதலிய துன்பங்களை நீக்கிக்கொள்வதற்கு உரிய ஜீவப்பிரம்ம ஐக்கிய ஞான நெறிகளைக் கூறும் ஸ்ரீ பகவத்கீதை முதலிய வேதாந்த பக்தி ஞான சாத்திரங்களைப் பயின்று கொண்டும் இருந்தனர்.

### வீட்டை விட்டுத் துறந்து சென்று கோமிலூர் மடாலயத்தை யடைந்து சந்நியாசம் பெற்று வேதாந்த ஞான உபதேசங் கேட்டுத் தெளிதல்.

இவ்வாறு தெய்வபக்தியுடன் வேதாந்த பக்தி ஞான சாத்திரங்களைப் பயின்றுவருங் காலத்தில், கோவிந்தராஜருக்கு 19ஆம் வயது (நிகழ்வதாகிய)

பிரபவ வருஷம் (ஆங்கிலம் 1927ஆம் வருஷம்) வந்தது. அக்காலத்தில் பெற்ருேர்கள் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று கோவிந்தராஜரிடம் கூறினர். கோவிந்தராஜர் பெற்ருேர் கூறியதற்கு உடன்படாதவராய், வீட்டினின்றும் புறப்பட்டு இராம நாதபுரம் மாவட்டம் காரைக்குடிக்குச் சமீபத்தில் உள்ளதும், ஸ்ரீ ஜகத்குரு சங்கரபகவத் பாதாச்சாரிய சுவாமிகளின் அத்வைத ஞானகுரு பரம்பரையைச் சேர்ந்ததும் ஆன கோயிலூர் மடாலயத்தை யடைந்து, அங்கு குருமூர்த்தியாக இருந்த ஸ்ரீ மகாதேவ ஞான தேசிக சுவாமிகளைக் குருவாகக்கொண்டு அவர்களிடம் காஷாய சந்நியாசத்தைப் பெற்று, 'கோவிந்தசுவாமி' என்னும் தீக்ஷா நாமத்தையடைந்து, அங்கு உபதேச பாடமாக நடத்தப் பெறுகின்ற 'நாநா ஜீவ வாதக் கட்டளை' முதல்'ஞானவாசிட்டம்'வரையுள்ள வேதாந்த ஞான சாத்திரங்களையும், இதர இலக்ஷண கிரந்தங்க ளென வழங்கும் விசாரசந்திரோதயம், பால போதம் விசாரசாகரம், பஞ்சதசி முதலிய வேதாந்த ஞானசாத் திரங்களையும் உபதேச பாடமாகக் கேட்டுக் கொண் டிருந்ததுடன், இத்தகைய ஞான சாத்திரங்களின் பொருள்களிலுண்டாகும் சந்தேகங்கள் அனைத்தையும் அங்கு அசேஷ சாத்திரபாண்டித்தியமும் ஆத்ம நிஷ் டையுமுடைய சிறந்த ஞானமூர்த்தியாக இருந்த, ஸ்ரீ வீர நாராயண ஞானதேசிக சுவாமிகள் அவர்களிடம் கேட்டும் தெளிந்திருந்தனர்.

## வடநாட்டிலுள்ள ஸ்ரீ காசி க்ஷேத்திர முதலிய புண்ணிய க்ஷேத்திர தரிசனத்திற்கும் சமஸ்கிருத மொழி கற்பதற்கும் வடநாடு செல்லுதல்

இவ்வாறு வேதாந்தஞான சாத்திரங்களை உபதேச பாடமாகக் கேட்டுத் தெளிந்திருந்த காலத்தில், கோவிந்த சுவாமிகட்கு 29 ஆம் வயது (ஈசுவர வருஷம், ஆங்கிலம் 1937 ஆம் வருஷம்) வந்தது. அக்காலத்தில் கோவிந்த சுவாமிகளுக்கு வட நாட்டிலுள்ள ஸ்ரீ காசி க்ஷேத்திரம் முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களைத் தரிசனம் செய்ய வேண்டும் என்றும் அங்கு சமஸ்கிருத மொழி கற்றுச் சமஸ்கிருத மொழியில் உள்ள வேதாந்த ஞான சாத்திரங்களைத் தெளிய வேண்டும் என்றும் விருப்பமுண்டாகித் தமது குரு மூர்த்தியாகிய ஸ்ரீ மகா தேவ ஞான தேசிக சுவாமிகளிடம் தமது கருத்தைத் தெரிவித்து அனுமதி பெற்றுக் கொண்டு, காசி க்ஷேத்திரம் சென்று அங்குள்ள கங்கை நீராடி ஸ்ரீ விசுவநாதர் முதலிய தெய்வங்களை விதிப்படி வணங்கிப் பின்பு அரித்துவாரம் சென்று, அங்கு கனகல் என்னும் பகுதியில் கங்கைக் கரையில் உள்ள ஸ்ரீ சூரத்கிரி மகேசுவரானந்த கிரி மண்டலேசுவர சுவாமிகளின் ஆசிரமத்தில் தங்கியிருந்து, சமஸ்கிருத மொழி பயின்று, ஸ்ரீ பகவத்கீதை முதலிய வேதாந்த பக்தி ஞான சாத்திரங்களைப் பயின்றனர். அவ்வாறு இருந்துவருங் காலத்தில் அங்குள்ள மண்டலேசுவரர் அவர்களால் "கோவிந்தானந்தகிரி சுவாமி" என்னும் நாமம் அமைக்கப் பெற்று, அவர்களின்

ஆசிர்வாதம் பெற்றிருந்தனர். இவ்வாறு ஓர் ஆண்டுக் காலம் அங்குத் தங்கியிருந்தனர்.

## கோயிலூர் மடாலயத்திற்கு வருதல்

பின்பு அங்குள்ள மண்டலேசுவர சுவாமிகளிடம் கோயிலூர் மடாலயத்திற்கு வருவதற்குக் கேட்டு அனுமதி பெற்றுக் கொண்டு, புறப்பட்டுக் கோயிலூர் மடாலயம் வந்து சேர்ந்து, தமது குருமூர்த்தியாகிய ஸ்ரீ மகா தேவஞான தேசிக சுவாமிகளை வணங்கி வட நாடு சென்று வந்த வரலாறுகளைக் கூறி ஆசி பெற்றுக் கொண்டு, அவர்களின் விருப்பத்தின்படி அவர்களின் சமீபத்திலேயே இருந்து வந்தனர்.

## தஞ்சாவூர் கரந்தை ஸ்ரீ பாலைய ஞான தேசிக சுவாமிகள் மடாலயத்தின் தலைவராதல்

இவ்வாறு இருந்துவருங் காலத்தில் தஞ்சாவூர் கரந்தை ஸ்ரீபாலைய ஞான தேசிக சுவாமிகள் மடாலயத்தின் தலைவராக இருந்த ஸ்ரீ வீர. கிருஷ்ண சுவாமிகள் தமது சரீரத்தின் அந்திய காலம் சமீபித்ததையறிந்து, தமக்கு அடுத்தபடியாக அந்த மடாலயத்தின் தலைமை வகிக்கத்தக்க சாதுவை நியமிக்க வேண்டும் என்னும் கருத்தினராய், அப்போது அவ்விடம் வந்திருந்த பிரம்மசபை ஸ்ரீ வீர. அருணாசல சுவாமிகள் மூலம் தமது கருத்தைக் கோயிலூர் மடாலயம் குருமூர்த்தியாகிய ஸ்ரீ மகாதேவஞான தேசிகரிடம் தெரிவித்தனர்.

அதற்கு ஸ்ரீ மகா தேவஞான தேசிக சுவாமிகள் கோவிந்த சுவாமியே அம்மடாலயத்திற்குத் தலைமை வகிக்கும் தகுதியுள்ளவர் என்று தெரிவித்து, கோவிந்த சுவாமிகளிடம் தஞ்சாவூர் ஸ்ரீ பாலைய ஞான தேசிக சுவாமிகள் மடாலயத்திற்குத் தலைமை வகிக்கும்படி கட்டளையிட்டு அனுப்பிவைத்தனர்.

கோவிந்த சுவாமிகள் குருமூர்த்தியின் கட்டளை யின் வண்ணம் தஞ்சாவூர் ஸ்ரீ பாலைய ஞான தேசிக சுவாமிகளின் மடாலயத்திற்குச் சென்று, சித்திரபானு வருஷம் ஆவணி மாதம் 31 ஆம் தேதி (ஆங்கிலம் 1942 ஆம் வருஷம் செப்டம்பர் மாதம் 16 ஆம் தேதி) அம்மடாலயத்திற்குத் தலைவராக அமைந்து ஸ்ரீ பாலைய ஞான தேசிக சுவாமிகளின் பூசனையாதி களையும், வேதாந்த ஞான சாத்திர போதனைகளையும், ஆத்மத்தியானுதிகளையும் சிறப்புறப் புரிந்து கொண் டிருந்தனர்.

### *ஏகாம்பரக்குப்பம் பேட்டை ஸ்ரீசிவசுப்பிரமணிய சிவானந்தயதீந்திர சுவாமிகளின் மடாலயத்தின் தலைவராதல்*

இவ்வாறு தஞ்சாவூர் மடாலயத்தில் இருந்துவருங் காலத்தில், கோயிலூர் மடாலயம் குருமூர்த்தியாகிய ஸ்ரீ மகாதேவ ஞான தேசிக சுவாமிகளுடன் கூட இருந்து, திருக்களர் ஆண்டவரென வழங்கும் ஸ்ரீ வீர சேகர ஞானதேசிக சுவாமிகளிடம் ஞானோபதேசம் பெற்ற, வேத மொழிபெயர்ப்பாசிரியர், காசிவாசி ஸ்ரீ சிவானந்தயதீந்திர சுவாமிகள், சித்தூர் மாவட்டம்

ஏகாம்பரக் குப்பம் குமார வெங்கிட பெருமாள் ராஜாப் பேட்டை யென்னும் ஊரில் ஓர் சிறந்த மடாலயம் அமைத்து, அதற்குத் தமது உபாசன மூர்த்தியாகிய சிவசுப்பிரமணியரின் பேரால் ஸ்ரீ சிவசுப்பிரமணிய மடம் என்று பெயரிட்டு அங்குத் தமது சீடர்கட்கு ஞானோபதேசம் புரிந்து கொண்டிருந்து, பின்பு சமாதி யடைந்து சமாதியாலயம் கொண்டிருந்தனர். அதற்கு முதலில் ஸ்ரீ சிவசுப்பிரமணியர் மடம் என்றும், ஸ்ரீ சிவானந்த யதீந்திரசுவாமிகளின் சமாதி ஏற்பட்ட பின் ஸ்ரீ சிவசுப்பிரமணிய சிவானந்த யதீந்திர சுவாமிகள் மடம் என்றும் பெயர்கள் வழங்கலாயின. அந்த மடாலயத்திற்குச் சர்வதாரி வருஷம் ஆவணி மாதம் (ஆங்கிலம் 1948 ஆம் வருஷம் செப்டம்பர் மாதம்) ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகள் சென்று தலைமை தாங்க வேண்டிய நிலைமை ஏற்பட்டதனுல், தஞ்சாவூர் ஸ்ரீ பாலைய ஞான தேசிக சுவாமிகளின் மடாலயத்திற்குத் தலைவராக ஸ்ரீ மகா வாசுதேவசுவாமிகளை நியமனம் செய்துவிட்டு, ஏகாம்பரக் குப்பம் பேட்டை ஸ்ரீ சிவ சுப்பிரமணிய சிவானந்த யதீந்திர சுவாமிகள் மடாலயம் சென்று தலைமை தாங்கி, அங்கு நடைபெற வேண்டிய பூசனையாதிகளையும், வேதாந்த ஞான சாத்திரங்களின் போதனைகளையும், சிறப்புறப் புரிந்து கொண்டும், ஆத்மத்தியானம் புரிந்து கொண்டும் இருந்து வந்தனர்.

## தஞ்சாவூர் ஸ்ரீ பாலைய ஞான தேசிக சுவாமிகள் மடாலயத்திற்கு வந்திருத்தல்

இவ்வாறு இருந்து வருங்காலத்தில் தஞ்சாவூர் ஸ்ரீ பாலைய ஞான தேசிக சுவாமிகள் மடாலயத்திற்குத்

தலைவராக நியமனஞ் செய்யப் பெற்ற மகா வாசுதேவ சுவாமிகள் மன்மத வருஷம் மார்கழி மாதம் (ஆங்கிலம் 1956 ஆம் வருஷம் டிசம்பர் மாதம்) விதேக முக்தி யடைந்தனர். இவ்வாறு வாசுதேவ சுவாமிகள் விதேக முக்தியடையவே, தஞ்சை மடாலயத்தின் தலைமை தாங்கும் நிலைமை மகா கோவிந்த சுவாமிகட்கு அமைந்து விட்டது. அதனுல் மகா கோவிந்தசுவாமி கள் ஏகாம்பரக் குப்பம் பேட்டையிலிருந்து புறப்பட்டுத் தஞ்சாவூர் மடாலயம் வந்து சேர்ந்து, ஸ்ரீ பாலைய ஞான தேசிக சுவாமிகளின் பூசனையாதிகளைச் சிறப்புற நடைபெறச் செய்து கொண்டும், ஸ்ரீ பாலைய ஞான தேசிக சுவாமிகள் ஆலயத்தின் சில பாகங்களும் மடாலயத்தின் சில பாகங்களும் சீர்குலைந்திருந்ததைச் சீரமைப்புத் திருப்பணி செய்து கொண்டும் இருந்தனர்.

## சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடம் ஜகத்குருவின் ஆசி பெறுதல்

இவ்வாறு இருந்துவருங்காலத்தில் சிருங்ககிரி ஸ்ரீ சாரதாபீடம் ஜகத்குரு ஸ்ரீ அபிநவ வித்தியா தீர்த்த சங்கராச்சார்ய சுவாமிகள் அவர்கள் தஞ்சா வூருக்கு விஜயம் செய்திருந்ததையறிந்து, அவர்கள் தங்கியிருந்த நிலையத்திற்குச் சென்று சிறந்த புஷ்பங் கள் பழங்கள் முதலிய பூஜாதிரவியங்களை அவர் களது சந்நிதியில் வைத்து, விதிப்படி வணக்கஞ் செய்து ஸ்ரீ பாலைய ஞான தேசிக சுவாமிகளின் மடா லயத்திற்கு எழுந்தருளி ஸ்ரீ பாத பூசனையை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று வேண்டிக் கொண்டனர். அவர்களும் ஆசி வழங்குதல் செய்து, சம்மதந் தந்த னர். ஆகவே அவர்கள் வருகை தருவதாகக் குறிப்

பிட்ட நாளாகிய, விகாரி வருஷம் ஆனி மாதம் 22 ஆம் தேதி (ஆங்கிலம் 1959 ஆம் வருஷம் ஜூலை மாதம் 6 ஆம் தேதி) சோமவாரத்தன்று மடாலயத்தில் சிறந்த புஷ்பங்கள் நிறையப் பெற்ற பீடம் அமைத்து புஷ்பங்களாலான மேல்விதானம் அமைத்து, சிறந்த பூஜாதிரவியங்கள் அனைத்தையும் சேர்த்து வைத்து ஸ்ரீ ஜகத்குரு அவர்கள் வருகை தந்தபோது, பூர்ண கும்பம்காட்டி மேளதாளங்களுடன் அழைத்து வந்து புஷ்ப பீடத்தின் மீது அமரச் செய்து விதிப்படி சகல மரியாதைகளுடன் பாதபூசனை புரிந்து வணக்கஞ் செலுத்தினர். ஸ்ரீ ஜகத்குரு அவர்கள் மிகுந்த மகிழ்ச்சி யடைந்து பிரசாதங்கள் வழங்கி ஆசீர்வாதங்கள் புரிந்தனர். மகா கோவிந்த சுவாமிகள் ஜகத்குருவின் பிரசாதங்களையும் ஆசீர்வாதங்களையும் மிகுந்த பக்தி சிரத்தையுடன் பெற்றுக் கொண்டு மகிழ்ச்சியடைந் தனர்.

## *தஞ்சாவூர் ஸ்ரீ பாலைய ஞானதேசிக சுவாமிகள் மடாலயத்திற்கு வேறு தலைவரை நியமனஞ் செய்தல்*

இவ்வாறு இருந்துவருங் காலத்தில், வேதாந்த ஞான சாத்திரங்களின் சாரமான விஷயங்களைச் சாதன முதல் சாத்திய பரியந்தம் வரிசைக்கிரமமாகக் கூறிப் புகட்டுவதும் ஆத்மப் பிரம்ம ஐக்கிய ஞானத்தை யடைந்த ஞானிகளாகிய சான்றோர்களால் "சிறந்த ஞான நூல்" என்று புகழ்ந்து பாராட்டப் பெற்றதும், சிறந்த தமிழ்க் கவிகளால் அமைக்கப் பெற்றதும் ஆன கைவல்லிய நவநீதம் என்னும் வேதாந்த ஞான நூலை

இயற்றி உலகுக்களித்தவரும்ஸ்ரீ நாராயணஞான தேசிக சுவாமிகளின் சீடருமான ஸ்ரீ தாண்டவேசுவர சுவாமி களின் சமாதியாலயம் தஞ்சாவூர் மாவட்டம் நன்னில நகரில் சீர்குலைந்து இருந்ததை அறிந்து அதைச் சீரமைப்புத் திருப்பணி செய்யவேண்டுமென்று கருதிய வராய்த் தஞ்சாவூர் ஸ்ரீ பாலையஞானதேசிக சுவாமிகள் மடாலயத்திற்கு வேறு தலைவரை நியமனம்செய்துவிடத் தீர்மானஞ் செய்துகொண்டு, சென்னை வியாசர்பாடி ஸ்ரீ கர பாத்திர சிவப்பிரகாச ஞான தேசிக சுவாமிகள் மடாலயத்தில் ஞானகுருவாக விளங்கியஸ்ரீமுக்தானந்த ஞானதேசிக சுவாமிகட்கும் தமக்கும் சீடராக அமைந்த ஸ்ரீ மு. கோ. கிருஷ்ணசுவாமிகள் அவர்களை விகாரி வருஷம் கார்த்திகை மாதம் 27 ஆம் தேதி (ஆங்கிலம் 1959 ஆம் வருஷம் டிசம்பர் மாதம் 13 ஆம் தேதி) நியமனம் செய்து சகல நிர்வாகங்களையும் ஒப்படைத் தனர்.

### தஞ்சாவூர் மாவட்டம் நன்னிலம் நகரில் உள்ள ஸ்ரீ நாராயண தாண்டவேசுவர சுவாமிகளின் சமாதியாலய சீரமைப்புத் திருப்பணி செய்து கும்பாபிஷேகம் செய்தல்

பின்பு சுவாமிகள் நன்னிலம் சென்றார்கள். நன்னி லத்தில் மேற்கூறிய வண்ணம் சிறந்த வேதாந்த ஞான நூலாகிய கைவல்லிய நவநீதத்தை இயற்றும்படி அறிவித்ததனால் அந்நூற்கு ஏவுதற் கருத்தாவாகிய, ஸ்ரீ நாராயண ஞான தேசிக சுவாமிகளின் சமாதியும்; அந்த அறிவிப்பின் வண்ணம் அந்நூலை இயற்றி யருளியதனால் அந்நூற்கு இயற்றுதற் கருத்தாவும் அந் நாராயண ஞானதேசிக சுவாமிகளின் சீடருமான

ஸ்ரீ தாண்டவேசுவர ஞானதேசிக சுவாமிகளின் சமாதியும் பாண சிவலிங்கங்கள் அமைக்கப் பெற்று ஒரே ஆலயத்தில் விளங்குகின்றன. ஸ்ரீ நாராயண தாண்டவேசுவர சுவாமி ஆலயத்தைச் சீரமைப்புத் திருப்பணி செய்ய முயன்று கொண்டிருக்குங் காலத்தில், இந்து சமய அறநிலையப் பாதுகாப்புத் துறையினர் அவ்வாலயத்தைத் தங்கள் பாதுகாப்பில் அமைத்துத் திருப்பணி செய்ய ஏற்பாடு செய்து கொண்டிருப்பதாகக் கேள்வியுற்று, அந்த இந்து சமய அறநிலையப் பாதுகாப்புத் துறையின் ஆணையரிடம் நேரில் சென்று கலந்து பேசுங் காலத்தில் அவர்கள் மகா கோவிந்த சுவாமிகளை அவ்வாலயத்தின் திருப்பணி மேல் பார்வை செய்யும்படி, அவ்வாலயத்தின் தரும கர்த்தராக நியமனஞ் செய்து, பல ஆலயங்களின் உபரி நிதிகளிலிருந்து திருப்பணிக்குப் பெரும் பொருள் உதவி செய்யும்படி ஏற்பாடு செய்தனர். அவ்வாறு ஆலயங்களின் நிதிகளைப் பெற்றுத் திருப்பணி ஆரம்பித்து ஆலயத்தைப் பெரும்பான்மையையும் கருங்கல் திருப்பணியாக அமைத்துக் கொண்டிருந்ததுடன், கைவல்லிய நவநீத பாடம் நடைபெறுவதற்காகக் கைவல்லிய நவநீத பாடமண்டபமும் திருப்பணி செய்து கொண்டும் ஆலயத்தின் பூசனைகள் சிறப்புற நடைபெறச் செய்து கொண்டும் வந்தனர். அறநிலையப் பாதுகாப்புத் துறையினர் மூலம் பெறுகின்ற நிதியுடன் அன்பர்களிடமும் நிதியுதவி பெற்றுத் திருப்பணியை மேலும் சிறப்பாகச் செய்து கும்பாபிஷேகம் செய்ய வேண்டும் என்னும் கருத்தினராய் அவ்வாறு திருப்பணி செய்வதற்கு, காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ ஜகத்குரு சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகள் அவர்களிடம் நற்சான்றுப் பத்திரம்

பெற விரும்பி அவர்களிடம் சென்று விபரம் கூறி, நற்சான்றுப் பத்திரம், வழங்குமாறு வேண்டிக் கொண்டனர். ஸ்ரீ ஜகத்குரு அவர்கள் ஆசி வழங்கி "சிறந்த நூலாகிய வேதாந்த சார கைவல்லிய நவநீதம் இயற்றி உலகுபகாரம் புரிந்த ஸ்ரீ நாராயண தாண்டவேசுவர சுவாமிகளின் சமாதியாலயத் திருப்பணிக்கு அன்பர்கள் அன்பளிப்பு வழங்கிச் சிரேயசை அடைவார்களாக" என்று நற்சான்றுப் பத்திரம் வழங்குதல் செய்துஅத்துடன் ரூபாய்500/ஐந்நூறும் வழங்கியருளினர். பின்பு ஸ்ரீ-மகா கோவிந்த சுவாமிகள் ஸ்ரீ ஜகத்குரு அவர்களின் நற்சான்றுப் பத்திரத்தை அச்சிட்டு வெளியீடு செய்து வழங்கிப் பல அன்பர்களிடமும் நிதியுதவி பெற்றுக் கொண்டு வருங்காலத்தில் திருச்சி மாவட்டம் கொப்பமாபுரி ஸ்ரீ நடராஜ ரெட்டியார் ருக்மணியம்மையார் அவர்களின் மனைக்கு வந்து, அவர்களைச் சந்தித்துப் பொருளுதவி கேட்டுப் பெற்றுக் கொண்டனர். அவ்வாறு பெற்றுக் கொண்ட காலமாகிய, சார்வரி வருஷம் மாசி மாதம் 3 ஆம் தேதி (ஆங்கிலம் 1961 ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் 15 ஆம் தேதி) யாகிய நன்னாளில் நடராஜ ரெட்டியாரும், ருக்மணியம்மையாரும், மகா கோவிந்த சுவாமிகளிடம் "தாங்கள் இங்கு வந்திருந்து, எங்கட்கு வேதாந்த பக்தி ஞான சாஸ்திர உபதேசங்களைப் போதனை புரிய வேண்டும்" என்று கேட்டுக்கொண்டனர். அதற்கு மகா கோவிந்த சுவாமிகள் சம்மதங்கூறி, நன்னிலஞ் சென்று திருப்பணியைக் கவனித்துக் கொண்டும், இடையில் ஓய்வு ஏற்படுங் காலங்களில் கொப்பமாபுரி வந்திருந்து வேதாந்த பக்தி ஞான சாஸ்திரங்களின் உபதேச பாடபோதனை புரிந்து கொண்டும் வருவதாகத் தெரிவித்துவிட்டு, நன்னிலம் சென்று திருப்பணியைச் சிறப்பாக நடைபெறச் செய்து

கொண்டும், இடையில் ஓய்வு ஏற்படுங் காலங்களில் கொப்பமாபுரி வந்திருந்து, வேதாந்த பக்தி ஞான சாஸ்திரங்களின் உபதேச பாட போதனை புரிந்து கொண்டும் இருந்து, நன்னிலம் ஆலயத்தின் திருப் பணியையும் கைவல்லிய நவநீத பாட மண்டபத்தின் திருப்பணியையும் சிறப்புறச் செய்து முடித்து, கீலக வருஷம் ஆவணி மாதம் 20 ஆம் தேதி (ஆங்கிலம் 1968 ஆம் வருஷம் செப்டம்பர் மாதம் 4 ஆம் தேதி) புதன் கிழமை, பூர்வ பக்ஷம், திரயோதசி திதி, திரு வோண நக்ஷத்திரம், சித்தயோகம், விருச்சிக இலக் கினம் கூடிய சுப தினத்தில், உதயாதி நாழிகை 12க்கு மேல் 15க்குள் (மணி 10¾க்கு மேல் 12க்குள்) மகா கும்பாபிஷேகம் மிகவும் சிறப்பாக நடைபெறச் செய் தனர்.

**நன்னிலம் ஸ்ரீ நாராயண தாண்டவேசுவர சுவாமி ஆலயத்தின் தர்மகர்த்தர் பதவியை இராஜிநாமாச் செய்து, வேறு தர்மகர்த்தரை நியமனஞ் செய்தல்**

பின்பு ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகள் நன்னிலம் ஸ்ரீ நாராயண தாண்டவேசுவர சுவாமி ஆலயத்தின் நித்திய பூசனைகளும், நைமித்திக பூசனைகளும், வை காசி மாதம் விசாக நக்ஷத்திரத்தில் ஆண்டு தோறும் நடைபெறக் கூடிய ஆண்டுக்குரு பூசை விழாக்களும் எப்போதும் சிறப்பாக நடைபெறும்படியான ஏற்பாடு களும் செய்து முடித்து, தமது தர்மகர்த்தர் பதவியை இராஜிநாமாச் செய்து, திருமருகல் என்னும் ஊரில் உள்ளவரும், தெய்வ பக்தி சிரத்தைகள் நிறைந்தவரும், கைவல்லிய நவநீத ஸ்ரீ நாராயண தாண்டவேசுவர சுவாமி ஆலயத்தின் சீரமைப்புத் திருப்பணிக்குப்

பொருளுதவி புரிந்தவரும் ஆன ஸ்ரீ க. பத்மநாப முதலி யாரைத் தர்மகர்த்தராக நியமனஞ் செய்ய வேண்டு மென்று கருதி, இந்து சமய அறநிலையப் பாதுகாப்புத் துறை ஆணையரிடம் தெரிவித்து அவரது அனுமதி பெற்று, ஸ்ரீ க. பத்மநாப முதலியாரைத் தர்மகர்த்தராக நியமனஞ் செய்து தமது பொறுப்புக்கள் அனைத்தையும் அவரிடம் ஒப்படைத்து விட்டனர். அவ்வாறு அவற்றை ஒப்புக் கொண்ட ஸ்ரீ க. பத்மநாப முதலியார் ஆலயத்தின் நித்திய பூசனைகளையும், நைமித்திக பூசனைகளையும், ஆண்டுக் குருபூசை விழாக்களையும் மிகவும் சிறப்பாக நடைபெறச் செய்து கொண்டு வருகின்றனர்.

### கொப்பமாபுரி வந்து தொடர்ந்து தங்குதல்

பின்பு ஸ்ரீ மகா. கோவிந்த சுவாமிகள் சாதாரண வருஷம், வைகாசி மாதம், 25 ஆம் தேதி (ஆங்கிலம் 1970 ஆம் வருஷம் ஜூன் மாதம் 8 ஆம் தேதி) திங்கட்கிழமை கொப்பமாபுரிக்கு வந்து தொடர்ந்து தங்கியிருந்து, ருக்மணியம்மையாருக்கும், நடராஜ ரெட்டியாருக்கும் வேதாந்த பக்தி ஞான சாஸ்திர உபதேச பாட போதனைகள் செய்து கொண்டும், ஸ்ரீ இராம ஆசிரமத்தில் ஏகாந்தவாசமாய் ஆத்மானு சந்தான தியானம் செய்து கொண்டும் இருந்து வரு கின்றனர்.

### சீடர்கள், பக்தர்களின் நிலைமை

ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகளிடம் ஆசியுடன் கூடிய வேதாந்த பக்தி ஞான சாத்திர உபதேச போதனைகள் கேட்ட சீடர்களின் நிலைமையும், ஆசி பெற்ற பக்தர்களின் நிலைமையும், வருமாறு.

சீடர்கள் பலர் வைராக்கிய, ஆத்மஞான அப்பியாசஞ் செய்து ஆத்மஞான நிலையுற்றுச் சிறந்துவிளங்குகின்றனர்.

பக்தர்கள் பலர் ஆசி வழங்குதல் பெற்றுத் தமக்குள்ள மனக்குறைகள் நீங்கி மனநிறைவு பெற்றுச் சிறந்து விளங்குகின்றனர்.

**ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகள் இயற்றிய நூல்கள்:**

1. ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகளின் பரம குருவாகிய திருக்களர் ஸ்ரீ வீரசேகர ஞானதேசிக சுவாமிகளின் திருவெம்பாவையும்,திருப்பள்ளி எழுச்சியும்.
2. திருக்களர் ஸ்ரீ வீரசேகர ஞான தேசிக சுவாமிகளின் அறுபதாம் ஆண்டுக் குருபூசை விழாவை முன்னிட்டு இயற்றிய சரிதம், அந்தாதிக்கவி அறுபது.
3. மகாவாக்கிய விசாரம்.
4. மகாவாக்கிய விசார சங்கிரகம்.
5. காரண அகங்காரக் கிரந்தி நீக்கத்தால், காரிய காம மரண நீக்கம்.
6. மனிதன் எக்காரணத்தால் உயர்ந்தவன்.
7. சிந்முத்திரார்த்தம்.

தனிப் பாடல்களில் இரண்டு வருமாறு.

**சர்வ ஞான சாஸ்திரங்களும் கூறும் அறிவுரைகளின் கருத்தாகிய சர்வதுக்க காரண முறையும் சர்வதுக்க நீக்க காரண முறையும் கூறுதல்.**

**எல்லாத் துக்கங்களும் உண்டாகக் காரணமுறை கூறுதல்**

அறுசீர் ஆசிரிய விருத்தம்

நிகழெலாத் துயர்கள் நேரக் காரணம் அவாப்பேய் ஆர்தல்
திகழவாப் பேய்தான் சேரக் காரணம் அகப்பற் றூர்தல்
அகங்கரக் கிரந்தி யாரக் காரணம் அவித்தை யார்தல்
வகைமிகும் அவித்தை வாழக் காரணம் தனைக்கா ணமை-

எல்லாத் துக்கங்களும் நீங்கக் காரணமுறை கூறுதல்

நிகழெலாத் துயர்கள் நீங்கக் காரணம் அவாப்பேய் ஏகல்
திகழவாப் பேய்தான் தீரக் காரணம் அகப்பற் றேகல்
அகங்கரக் கிரந்தி யாழக் காரணம் அவித்தை யேகல்
வகைமிகும் அவித்தை மாளக் காரணம் தனைத்தான் காணல்

ஆகிய இவை முதலியனவாம்.

ஸ்ரீ குரு-மகா-கோவிந்த சுவாமிகள்

வரலாறு (சுருக்கம்) முடிந்தது.

---

# 3. ஸ்ரீ இராம பக்தர்களின் வரலாறு

**ஸ்ரீ இராமாஸ்ரமம் அமைத்துப் பூசனைகள் புரிந்து தொழுகை புரியும் அறப்பணிச் செல்வர்களான ஸ்ரீ நட ராஜ ரெட்டியார் ஸ்ரீ இராம ருக்மணியம்மையார் ஆகிய வர்களின் வரலாறு**

மேற்கூறிய பல சிறப்புக்கள் அமைந்த கொப்படா புரியின் கண்ணே, பூர்வகாலத்தில் வைணவர்களாயும், சைவ வைணவ சமரசக் கருத்தினராயும் தெய்வபக்தி யில் சிறந்தவர்களாயும், ஆந்திர மொழியினராயும் அற வள்ளல்களாயும் இருந்த பண்ட குலத்தினரான ('பண்டகுலம்' என்னும் ஆந்திர மொழிக்குத் தமிழ் மொழியில் பதவுரை 'விளைவுமரபு' என்பதாம். விரி வுரை விளைவு நிலங்களின் உரிமையாளராய் விளைவித் தலை ஆட்சி புரிபவர் மரபு ; என்பதாம். ஆகவே அவ் வாறுன மரபினரான) இரட்டியர்கள் என்னும் ரெட்டி யார்கள் மரபில் வேங்கடராம ரெட்டியார் என்பவர் இருந்தனர். இவருக்குப் பகவானது திருவருளால் இராமசாமி ரெட்டியார் என்னும் புத்திரர் உண்டானுர். இவர்கட்கு மிகுந்த விளைநிலங்கள் இருந்ததனுல் "பெரிய பண்ணையார்" என்ற பெயரும் வழங்கி வரலா னது. பண்ட குலத்தினரான இவர் சிறந்த அறவள்ள லாய் இருந்தனர். இவ்வாறு பண்டகுல ரெட்டியார் களில் பலர் பூர்வகாலம் முதலாக அறவள்ளல்களாக இருந்துவருகின்றனர் என்பதற்குச் சான்று, நல்லாற் றூர் துறைமங்கலம், சிறந்த ஞான குருவான ஸ்ரீ சிவப்

பிரகாச சுவாமிகள் தாம் இயற்றிய திருவெங்கையுலா வின் இடையில்,

" இரட்டியாம்-பண்ட குலத்தின் பயனுனன்-மண்டலிகர்,
நல்லகோல் இன்று நவைக்கோல் எனச்செயுங்கோல்
வல்லகோல் அண்ணு மலைவள்ளல்."

என்று, பண்ட குலத்தினராய் நடுநாட்டிலேயுள்ள துறை மங்கலத்திலே, சுமார் முந்நூறு வருடங்கட்கு முன்னே, வல்லகோலாதிபதி என்னும் பட்டப்பெயர் பெற்றுக் குறுநில மன்னவராய் இருந்த, இலிங்கா ரெட்டியாரின் அருந்தவப் புதல்வராய்த் திருவெங்கைத் திருவாலயத் திருப்பணி முதலிய பல அறப்பணிகளைப் புரிந்து, மேற்கூறிய ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகளின் மாணவராய் இருந்த அண்ணுமலை ரெட்டியாரைப் பாராட்டிக் கூறியிருப்பது சான்று ஆகும்.

இவ்வாறு மேற்கூறிய சிறந்த அறவள்ளலான இராமசாமி ரெட்டியார் அவர்கள், தமது மனை மாட்சி யிற் சிறந்த மனையாளாகிய அம்மணியம்மாள் என்கிற சிவகாமி யம்மையாருடன் இல்லறத்தை நல்லறமாக இனிது நடைபெறச் செய்து வருங்காலத்தில், அவர் கட்குக் குழந்தைகள் பிறப்பதும் இறப்பதுமாக இருந்தன. இவ்வாறு நான்கு குழந்தைகள் நிலையுருமற் போகவே இராமசாமி ரெட்டியாரும் சிவகாமியம்மை யாரும் ஆகியதம்பதிகள் மனவருத்தமுற்று, நமக்கு மக்கள் நிலைப்பதற்குத் தடையாகப் பூர்வவினையுள்ளது போலும், ஆகவே இனி அத்தடைகள் நீங்கும் பொருட்டுப் பகவானைக் குறித்து விசேட பூசனைகள் புரிவதுடன், புண்ணிய தீர்த்தாடனங்கள் புண்ணிய க்ஷேத்திர தரிசனங்கள் புரிந்து பகவானிடம் பிரார்த்

தனை செய்து கொள்ளவேண்டும்; என்று தீர்மானஞ் செய்துகொண்டு அவ்வாறே தமது மனையில் ஸ்ரீ இராமச்சந்திர பகவானுக்கு விசேட பூசனைகள் புரிந்தும் ஊரினுள் ஸ்ரீ கிருஷ்ண பஜனை மடம் அமைத்துவிசேட பூசனைகளும் பஜனைகளும் நடைபெறச் செய்தும், ஏழைகட்கு அன்னதானங்கள் புரிந்தும் வாழ்ந்தனர். ஸ்ரீ இராமேசுவர க்ஷேத்திர தரிசனம் முதலிய பல தீர்த்தாடனங்களும் க்ஷேத்திர தரிசனங்களும் செய்தும், ஊரிலுள்ள ஸ்ரீ குங்குமாம்பிகாசமேத சத்தரிஷீசுவர சுவாமி திரு ஆலயத்தின் தருமகர்த்தர் பதவியை ஏற்றுச் சிறந்த விசேட பூசனைகள் நடைபெறச் செய்து கொண்டும், பிரார்த்தனைகள் புரிந்தும் வந்ததுடன் ஸ்ரீ குங்குமாம்பிகா சமேத சத்த ரிஷீசுவர சுவாமி திருவாலயம் சீர்குலைந்திருந்ததைப் பெரும் பொருள் செலவிட்டுச் சிறந்த முறையில் சீரமைப்புத் திருப்பணியும் நடைபெறச் செய்துகொண்டுமிருந்தனர்.

### ஸ்ரீ இராம ருக்மணி யம்மையார் ஜனனம்

இவ்வாறு இராமசாமி ரெட்டியார் பல அறப்பணிகளைப் புரிந்து பிரார்த்தனைகள் செய்துகொண்டு வருங் காலத்தில் பகவானது திருவருளால் கலியுகாதி வருஷம் 5014 க்குச் சரியான சாலிவாகன வருஷம் 1835, ஆங்கிலம் 1913 ஆம் வருஷம், நவம்பர் மாதம், 16ஆம் தேதி, தமிழ் பிரமாதீச வருஷம், கார்த்திகை மாதம், 1 ஆம் தேதி, ஞாயிற்றுக்கிழமை உதயாதி நாழிகை 52½ க்குச் சரியான இரவு மணி 3, அமர பக்ஷம், திருதியை திதி, மிருக சீரிட நக்ஷத்திரம், கன்னிகா லக்கினம் கூடிய சுப வேளையில், சிறந்த குணங்கள் நிறைந்த தவப்புதல்வியானவர் ஜனனமானூர்.



**சாதகக் குறிப்பும் சாதக கன்மமும்**

தவப்புதல்வியாகிய குழந்தை ஜனன மானதினால் தாய் தந்தையர்கள் மிகவும் மகிழ்வுற்று, புண்ணிய தீர்த்த மாடி ஸ்ரீ பகவானுக்கு விசேட பூசனைகளும் வணக்கங்களும் புரிந்து, விதிப்படி சாதகக் குறிப்பை எடுத்துக்கொண்டு சாதக கன்மங்களையும் விதிப்படி செய்து, சருக்கரை வழங்குதல் முதலிய பலவகைத் தான தருமங்களையும் செய்தனர்.

பின்பு சோதிட வல்லுநர்களைக் கொண்டு சாதக பலன்கள் கணிக்கச்செய்தனர். சாதக கணிதம் செய்த சோதிட வல்லுநர்கள் சாதக வேளையின் சிறப்பைக் கொண்டு இந்தக் குழந்தை தெய்வீக அம்சமுடைய தாய்ப் பெருஞ்செல்வங்களை ஆட்சி புரிந்து தெய்வ பக்தி ஞானங்களை விசேடமாக அனுசரித்துத் தெய்வீக நிலையை அடைவதாக உள்ளது; என்று கணிதம் செய்தனர்.

**நாமகரணம்**

பின்பு தகுந்த நல்லோரையில் தாய் தந்தையர்கள் அந்தக் குழந்தைக்கு 'ருக்மணியம்மை' என்னும் நாம கரணம் செய்து சிறப்புற வளர்த்து வந்தனர்.

**இராமசாமி ரெட்டியார்**
**ஆலய கும்பாபிஷேகம் செய்தல்**

பின்பு இராமசாமி ரெட்டியார் தாம் தர்மகர்த்தராக இருந்து செய்து வருகின்ற ஸ்ரீகுங்குமாம்பிகா சமேத சத்த ரிஷீசுவர சுவாமி திருவாலயத்தின் சீரமைப்புத்

திருப்பணியைச் சிறப்புறச் செய்து முடித்து, கலியுகாதி வருஷம் 5015க்குச் சரியான சாலி வாகன வருஷம் 1936, ஆங்கிலம் 1914ஆம் வருஷம் மே மாதம் 7ஆம் தேதி, தமிழ் ஆனந்த வருஷம் சித்திரை மாதம் 25ஆம் தேதி, குருவாரம், பூர்வபக்ஷம் துவாதசி திதி, அஸ்த நக்ஷத்திரம், ரிஷப லக்கினம் கூடிய சுபயோக சுபதினத்தில் உதயாதி நாழிகை 3¾க்கு மேல் 5¾க்குள் (காலை மணி 7 நிமிஷம் 30க்கு மேல், மணி 8 நிமிஷம் 18க்குள்) மகா கும்பாபிஷேகம் சிறப்புற நடை பெறச் செய்தனர்.

### இராமசாமி ரெட்டியார் உயில் சாசனம் அமைத்தல்

பின்பு ருக்மணியம்மையாகிய குழந்தைக்கு ஒன்றரை யாண்டு வயது நடைபெறுங் காலத்தில் தந்தையாராகிய இராமசாமி ரெட்டியார் தமது செல்வங்கள் அனைத்தையும் தமது புத்திரியாகிய ருக்மணியம்மையார் ஆட்சி செய்யும் முறையில் தமது வார்சாக, ஆங்கிலம் 1915ஆம் வருஷம் மே மாதம் 27ஆம் தேதி, தமிழ் ராக்ஷச வருஷம் வைகாசி மாதம் 14ஆம் தேதி வியாழக்கிழமையன்று உயில் சாசனம் எழுதி வைத்தனர்.

### இராமசாமி ரெட்டியார் வைகுந்தபதவி யடைதல்

பின்பு ருக்மணியம்மையாரின் தந்தையாராகிய இராமசாமி ரெட்டியார் சிறிது சரீர அசௌகர்யம்போல் இருந்து ஆங்கிலம் 1915ஆம் வருஷம் மே மாதம் 29ஆம் தேதி, தமிழ் ராக்ஷச வருஷம் வைகாசி-

மாதம் 16ஆம் தேதி சனிவாரம் பிரதமை திதி அனுஷ நக்ஷத்திர நாளில் வைகுண்ட பதவியை யடைந்தனர்.

**ஸ்ரீ இராம ருக்மணி யம்மையார்**
**கல்வி கற்றல்**

பின்பு ருக்மணியம்மையாரின் அன்னையாராகிய சிவகாமியம்மையார், குழந்தையாகிய ருக்மணியம்மையைச் சிறப்புடன் வளர்த்து வந்து, ஐந்தாவது வயது நிகழும்போது, கொப்பமாபுரியிலிருந்த தொடக்கப் பள்ளிக்கு அனுப்பி அங்கு இருந்த சண்முக ஐயர் என்னும் ஆசிரியரிடம் கல்வி பயிலும்படி செய்தனர். ருக்மணியம்மையார் அப்பள்ளியி லிருந்து தமிழ்க் கல்வி மூன்றும் வகுப்பு வரை சிறப்புறக் கற்றுத் தேர்ந்தனர். அதன் பின்பு பத்தாவது வயது நிகழுங் காலத்தில் துறையூரிலிருந்த மிஷன் பள்ளியிற் சேர்ந்து தமிழும் சிறிது ஆங்கிலமும் கற்றனர். அங்குப் பன்னிரண்டாம் வயது வரை கல்வி கற்றனர். பின்பு கல்வி கற்பதிலிருந்து ஓய்வு பெற்றுக்கொண்டு தமது மனையில் இருந்தனர்.

**ஸ்ரீ இராம ருக்மணி யம்மையார்**
**நீதி நூல்களும் பக்தி ஞான நூல்களும் கற்றல்**

இவ்வாறு பள்ளிக்கூடங்களில் கல்வி கற்பதி லிருந்து ஓய்வு பெற்றுக் கொண்டு மனையில் தங்கி யிருந்தபோது அவர்தம் அன்னையாராகிய சிவகாமி யம்மையார், திருக்குறள் முதலிய நீதி நூல்களையும், இராமாயணம், பாரதம், பக்தவிஜயம், பகவத்கீதை

முதலிய பக்தி ஞான நூல்களையும் வாங்கிக் கொடுத்து ருக்மணியம்மையாரை வாசித்து வரும்படி செய்தனர். அந்நூல்களை ருக்மணியம்மையார் சிரத்தையுடன் வாசித்து வந்ததுடன் தமது வீட்டில் ஸ்ரீராமச்சந்திர பகவானது பட்டாபிஷேக சித்திர மூர்த்தத்தை ஸ்தாபனம் செய்து, மிகவும் பக்தி சிரத்தையுடன் பூசனை புரிந்து வணங்குவதும், அதிகாலையில் பிரம்ம முகூர்த்த காலத்தில் எழுந்து ஆசார நியமங்களுடன் சுப்ரபாத ஸ்தோத்திரம் முதலிய துதிகளைச் செய்து வருவதும், பகவத்கீதை பாராயணம் செய்வதுமாகப் பகவானது பக்தி மார்க்கத்தில் மிகவும் ஈடுபட்டுக் கொண்டு வாழ்ந்து வந்தனர்.

## ஸ்ரீ இராம ருக்மணியம்மையார்
## ஸ்ரீ நடராஜ ரெட்டியார் திருமணம்

பின்பு ருக்மணியம்மையாருக்குப் பதினான்கு வயது நிகழுங் காலத்தில், அன்னையாகிய சிவகாமி யம்மையார் ருக்மணியம்மையாருக்குத் திருமணம் செய்ய வேண்டுமென்று விரும்பினர். ருக்மணி யம்மையாருக்குப் பொருத்தமான தெய்வபக்தியும் சகல நற்குணங்களும் பொருந்திய மணமகன் எங்கு இருக்கிறார் என்று ஆராய்ந்து, உப்பிலியபுரத்தில் உள்ளவராயும், நாகரெட்டியாரின் பௌத்திரராயும், திப்புரெட்டியார் என்னும் தந்தையாருக்கும் நல்லம் மாள் என்னும் தாயாருக்கும் புத்திரராயும், தெய்வ பக்தியும் சகல சற்குணங்களும் நிறைந்தவராயும், சிறந்த கல்வியறிவுள்ளவராயும் இருந்த இலக்ஷ்மி நாராயண ரெட்டியார் என்கிற நடராஜ ரெட்டியார் என்பவரை மணமகனாகக் கொள்ளக் கருதி அவரது

சாதகக் குறிப்பைக் கொண்டு திருமணப் பொருத்தம் பார்த்ததில் அவரது ஜனன காலமானது, கலியுகாதி ஸு 5013க்குச் சரியான சாலிவாகன ஸு 1834, ஆங்கிலம் 1912ஆம் வருஷம் அக்டோபர் மாதம் 26ஆம் தேதி, தமிழ் பரிதாபி வருஷம் ஐப்பசி மாதம் 10ஆம் தேதி, சனிவாரம் உதயாதி நாழிகை 9 விநாடி 7½க்குச் சரியான பகல் மணி 9 நிமிஷம் 39½ பூர்வ பக்ஷம், பௌர்ணமி திதி, அசுவனி நக்ஷத்திரம், தனுர் லக்கினம் கூடிய சுப வேளையில் அமைந்திருப்பதால் திருமணப் பொருத்தம் மிகவும் சிறப்பாக அமைந் துள்ளதை யறிந்து, திருமணத்திற்கு நிச்சயஞ் செய்து தமது கொப்பமாபுரி மணமகள் மனையிலேயே திருமணம் செய்வதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் சிறப்பாகச் செய்து, பிரபவ வருஷம், ஆனி மாதம் 5ஆம் தேதி (ஆங்கிலம் 1927ஆம் வருஷம் ஜூன் மாதம் 19 ஆம் தேதி) ஆதி வாரம், பஞ்சமி திதி, திருவோண நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் உதயாதி நாழிகை 15க்கு மேல் 17½க்குள் (பகல் மணி 12க்கு மேல் 1 மணிக்குள்) கன்னிகா லக்கின சுபவேளையில் வேத விதிப்படி மிகுந்த சிறப்பாகத் திருமணம் நடைபெறச் செய்தனர்.

பின்பு சிவகாமியம்மையார் தமது மருமகனாகிய நடராஜ ரெட்டியாரைத் தமது கொப்பமாபுரி மனை யிலேயே இருந்து சகல நிர்வாகங்களையும் கவனித்து நடத்தி வரும்படி ஏற்பாடு செய்தனர்.

பின்பு நடராஜ ரெட்டியாரும் ருக்மணியம்மை யாரும் இல்லற நெறியைச் சிறப்புற நடைபெறச் செய்து கொண்டும், மனையில் அமைத்துள்ள ஸ்ரீ இரா

மச்சந்திர பகவானுக்குச் சிறந்த முறையில் பூசனைகள் புரிந்து கொண்டும், ஏழைகட்கு அன்னதானங்கள் புரிந்து கொண்டும், ஊரிலுள்ள ஸ்ரீ குங்குமாம்பிகா சமேத சத்தரிஷீசுவர சுவாமி திருவாலயத்திற்குச் சென்று வணக்கங்கள் புரிந்துகொண்டும், ஸ்ரீ கிருஷ்ண பஜனை மடத்தில் சிறப்புறப் பூசனைகள் நடைபெறச் செய்துகொண்டும், பகவத்கீதை பாராயணம் செய்து கொண்டும் இருந்து வந்தனர்.

## ஸ்ரீ இராம ருக்மணியம்மையார் சாதுக்களிடம் பக்தி ஞான அர்த்தங்களைக் கேட்டல்

இவ்வாறு இருந்து வருகின்ற ருக்மணியம்மையாரின் பதினான்காம் வயது பூரணமாகி வருங்காலத்தில், ஸ்ரீ ஜகத்குரு சங்கராச்சார்ய சுவாமிகளின் அத்வைத ஞான குரு பரம்பரையைச் சேர்ந்த கோயிலூர் மடாலயத்தின் குருகுலத்தில் உபதேசம் பெற்ற கடம்பூர் சுவாமிகள் என்னும் சாது மகாத்மாவானவர் தற்செயலாகக் கொப்பமாபுரிக்கு வந்திருந்தபோது, ருக்மணியம்மையாரின் பகவத்பக்தி மார்க்கத்தின் கொள்கையைக் கேள்வியுற்று ருக்மணியம்மையாரின் வீட்டிற்கு வந்து சிலநாள் தங்கியிருந்து, அவர்கட்கு வேதாந்த பக்தி ஞான நெறிகளின் விசேட விபரங்களையும், பல நீதிகளையும், போதனை செய்துகொண்டிருந்தார்கள். அதன் பின்பு அவ்வாறே பல சாது மகாத்மாக்களும் வந்து தங்கியிருந்து பக்திஞான சம்பந்தமான சத்சம்பாஷணைகளைப் புரிந்துகொண்டிருந்தனர். அவ்வாறு சாது மகாத்மாக்கள் வரும்போது அவர்கட்கு வணக்கஞ் செலுத்திச் சிறந்த மரியாதைகள் செய்து, அறிவுரைகளைக் கேட்டு வந்தனர். அக்காலத்

தில் ருக்மணியம்மையார் தமது உபாசன மூர்த்தியா கிய ஸ்ரீ இராமச்சந்திர பகவானையே தமக்குக் குருவாகக் கொண்டு, பல சாது மகாத்மாக்களின் அறிவுரைகளைக் கேட்டுக்கொண்டு வந்தனர். வேறு ஆலயங்கட்குச் சென்று தெய்வ தரிசனங்கள் செய்யும்போது, எல்லாத் தெய்வ மூர்த்திகளையும் ஸ்ரீ இராமச்சந்திர பகவானது மாற்று வடிவங்களே என்று அறிந்து வணங்கி வந்த னர். பிரார்த்தனைகள் புரியுங்காலத்தில் தமது மனமா னது எப்போதும் ஸ்ரீ பகவானது பக்தி ஞானத்திலேயே நிலைக்கவேண்டும் என்று பிரார்த்தனைகள் புரிந்து கொண்டு வந்தனர்.

## இராமதுரை ரெட்டியார் ஜனனம்

இவ்வாறு ருக்மணியம்மையார் ஸ்ரீ பகவானது ஆராதனைகளிலும், அறநெறிகளிலும் சிறப்பாக ஈடுபட் டுக்கொண்டு இல்லறத்தை நல்லறமாக நடைபெறச் செய்து கொண்டு வருங்காலத்தில், ஸ்ரீ பகவானது திரு வருளால் கலியுகாதி வருஷம் 5038க்குச் சரியான சாலிவாகன வருஷம் 1859, ஆங்கிலம் 1936 ஆம் வருஷம் ஜூலை மாதம் 6 ஆம் தேதி, தமிழ் தாது வரு ஷம் ஆனி மாதம் 23 ஆம் தேதி, சோமவாரம் உதயாதி நாழிகை 45 விநாடி 30க்குச் சரியான இரவு மணி 12 நிமிஷம் 12, அமரபக்ஷம், திருதியைதிதி, திருவோண நக்ஷத்திரம், மீன லக்கினம் கூடிய சுப வேளையில் தவப்புதல்வர் ஜனனமானார்.

தவப்புதல்வராகிய ஆண் குழந்தை ஜனன மானதை யறிந்த ருக்மணியம்மையாரும் நடராஜ ரெட்டியாரும் மிகவும் மகிழ்ச்சியை யடைந்து.

புண்ணிய தீர்த்தமாடி ஸ்ரீபகவானுக்கு விசேட பூசனைகளும் வணக்கங்களும் புரிந்து விதிப்படி சாதகக் குறிப்பை எடுத்துக்கொண்டு, சாதக கன்மங்களையும் விதிப்படி செய்து, சருக்கரை வழங்குதல் முதலிய பலவகைத் தானதருமங்களையும் செய்தனர். பின்பு சோதிடவல்லுனர்களைக் கொண்டு சாதக பலன்கள், கணிதஞ் செய்ததில்; குழந்தை சிறந்த குணங்களுடையதாயும், தாய் தந்தையரிடத்தில் மிக்வும் அன்புடையதாகவும், தெய்வ பக்தியுடையதாகவும், மிகுந்த செல்வங்களுடையதாகவும், தீர்க்காயுள் உள்ளதாகவும் வாழ்ந்துவரும் எனப் பலன்கள் கணிதமானதையறிந்து, சந்தோஷத்தையடைந்து குழந்தையைச் சிறப்பாக வளர்த்து வந்தனர்.

### நாம கரணம்

பின்பு அக்குழந்தைக்கு நல்ல சுபமுகூர்த்த நாளில் "இராமதுரை" என நாமகரணம் செய்தனர்.

### கல்வி கற்கச் செய்தல்

பின்பு இராமதுரை ரெட்டியாருக்கு ஐந்தாவது வயது நிகழுங்காலத்தில் கொப்பமாபுரியி லிருந்த தொடக்கப் பள்ளிக்கு அனுப்பித் தமிழ்க் கல்விகற்கச் செய்தனர். இவ்வாறு சில காலம் தமிழ்க் கல்வி கற்றபின் இராமதுரை ரெட்டியார் திருப்பராய்த்துறை இராமகிருஷ்ண தபோவனத்திற்குச் சென்று அங்குள்ள குருகுலத்தில் சேர்ந்திருந்து, அங்குள்ள விவேகானந்த வித்தியாலயத்தில் தமிழும் ஆங்கிலமும் கற்றுத் தேர்ந்தனர்.

## இராமதுரை ரெட்டியாருக்கும் யசோதையம்மையாருக்கும் திருமணம்

பின்பு இராமதுரை ரெட்டியாருக்குப் பத்தொன்ப தாவது வயது நிகழுங் காலத்தில் அவருக்குத் திருமணம் செய்யவேண்டு மென்று தாய் தந்தை யராகிய ருக்மணியம்மையாரும் நடராஜ ரெட்டி யாரும் கருதி, இராமதுரை ரெட்டியாரின் சற்குணங் கட்குப் பொருத்தமான சகல சற்குணங்களும் பொருந் திய மணமகளாக இருக்க வேண்டுமென்று ஆராய்ந்து ஸ்ரீரங்கத்தில் இருக்கும், ரெங்கூன், ராஜா டாக்டர் S. இராமநாத ரெட்டியாரின் பௌத்திரியும், ஸ்ரீரங்கம் R. வேணுகோபால் ரெட்டியாராகிய தந்தையாருக்கும், இராமதுரை ரெட்டியாரின் அத்தையாரான இராதா அம்மையாராகிய தாயாருக்கும் கனிஷ்டபுத்திரியுமான யசோதையம்மையார் சிறந்த கல்வியறிவும், மிகுந்த தெய்வ பக்தியும், சகல சற்குணங்களும் பொருந்தி யிருப்பதையறிந்து, அவரைத் திருமணம் செய்விக்கக் கருதி, அவரது சாதகக் குறிப்பைக் கொண்டு திருமணப் பொருத்தம் பார்த்ததில், அவரது ஜனன காலமானது, கலியுகாதி வருஷம் 5040க்குச் சரி யான சாலிவாகன வருஷம் 1861, ஆங்கிலம் 1939 ஆம் வருஷம் ஏப்ரல் மாதம், 10ஆம் தேதி, தமிழ் வெகுதானிய வருஷம் பங்குனி மாதம், 28ஆம் தேதி, சோமவாரம் உதயாதி நாழிகை 20 விநாடி 37½க்குச் சரியான பகல் மணி 2 நிமிடம் 15, அமரபக்ஷம் சப்தமி திதி, மூலநக்ஷத்திரம், கடகலக்னம் கூடிய சுபவேளை யில் அமைந்திருப்பதால் திருமணப் பொருத்தம் மிக வும் சிறப்பாக அமைந்துள்ளதை யறிந்து, திருமணத் திற்கு நிச்சயம் செய்து, ஸ்ரீரங்கம் மணமகளின் மனையி

லேயே திருமணம் செய்வதற்கு வேண்டிய ஆயத்தங் களைச் சிறப்பாகச் செய்து ஜயவருஷம், ஆனி மாதம், 28ஆம் தேதி (ஆங்கிலம் 1954 ஆம் வருஷம், ஜூலை மாதம், 12ஆம் தேதி) சோமவாரம், துவாதசி திதி, அனுஷ நக்ஷத்திரம், சித்தயோகம் கூடிய சுப தினத்தில், உதயாதி நாழிகை $7\frac{1}{2}$ க்கு மேல் $11\frac{1}{4}$ க்குள் காலை மணி 9க்கு மேல் 10 க்குள் சிம்ம லக்கின சுப வேளையில் வேத விதிப்படி மிகுந்த சிறப்பாகத் திரு மணம் நடைபெறச் செய்தனர்.

அதன்பின்பு இராமதுரை ரெட்டியாரும் யசோதை யம்மையாரும், இல்லற நெறியைச் சிறப்புற நடை பெறச்செய்து கொண்டும், ஸ்ரீ பகவானது ஆராதனை களையும் சிறப்புறச் செய்து கொண்டும் வாழ்ந்து வரு கின்றனர்.

## இராமதுரை ரெட்டியார் ஸ்ரீ இராமாசிரமத்திற்கு அறப்பணி புரிதல்

இராமதுரை ரெட்டியார் இராமாசிரமத்திற்குப் பூசனை முதலிய செலவுகளுக்காகப் போதிய விளை நிலங்கள் எழுதி வைத்துக் கண்காணித்து வருகின்ற னர்.

உரிய காலங்களில் இராமதுரை ரெட்டியாரும் யசோதையம்மையாரும், இராமாசிரமத்திற்கு வந்து, ஸ்ரீ இராமச்சந்திர பகவானைத் தரிசனம் செய்து வணக்கம் செலுத்திக் கொண்டு வருகின்றனர்.

**நடராஜ ரெட்டியார் ஆலய தர்மகர்த்தா ஆதலும் சீரமைப்புத் திருப்பணிசெய்து கும்பாபிஷேகம் செய்தலும்**

பின்பு ருக்மணியம்மையாரும் நடராஜ ரெட்டியாரும் சிறந்த முறையில் பகவத் பக்தியுடன் கூடிய பூசனைகளும் அறநெறிகளும் புரிந்துகொண்டு வருங் காலத்தில், கொப்பமாபுரியிலுள்ள ஸ்ரீ குங்குமாம்பிகா சமேத சத்தரிஷீசுவர சுவாமி ஆலயத்திற்கு நடராஜ ரெட்டியார் தர்மகர்த்தாவாக இருக்கவேண்டும் என்று, ஊர்ப்பொது மக்களும், இந்து சமய அறநிலையப்பாது காப்புத் துறையினரும் தீர்மானம் செய்து, நடராஜ ரெட்டியாரிடம் தெரிவித்துக்கொண்டனர். நடராஜ ரெட்டியாரும் இது பகவத் காரியமாக இருப்பதால் ஏற்றுக்கொள்ளலாம் என்று கருதி, அவர்களது வேண்டுகோளுக்கு இணங்கி, விஜய வருஷம் (ஆங்கிலம் 1953 ஆம் வருஷம்) முதல் தர்மகர்த்தாவாக இருந்து ஆலயத்தின் நித்திய பூசனைகளையும், நைமித்திக பூசனைகளையும் ஆண்டு விழாக்களையும் சிறப்புறச் செய்துகொண்டு வந்தனர். ஆலயம் சீர்குலைந் திருந்ததைப் பெரும் பொருள் செலவிட்டுச் சிறப்புறச் சீரமைப்புத் திருப்பணி செய்து, கலியுகாதி வருஷம் 5066-க்குச் சரியான சாலி வாகன வருஷம் 1887, ஆங்கிலம் 1965ஆம் வருஷம் ஜூலை மாதம் 8ஆம் தேதி, தமிழ் விசுவாவசு வருஷம் ஆனி மாதம் 24 ஆம் தேதி குரு வாரம், பூர்வபக்ஷம், தசமிதிதி, சுவாதி நக்ஷத்திரம் சிம்ம லக்கினம் கூடிய சுபயோக சுபதினத்தில் உதயாதி நாழிகை 7க்கு மேல் 12 க்குள் (காலை மணி 8 நிமிஷம் 40 க்குமேல்-மணி 10 நிமிஷம் 45 க்குள்) மகா கும்பாபிஷேகம் மிகவும் சிறப்பாக நடைபெறச் செய்தனர்.

### ஸ்ரீ நடராஜ ரெட்டியாரும் ஸ்ரீ இராமருக்மணி யம்மையாரும் சிருங்ககிரி ஸ்ரீ சாரதாபீடம் ஜகத்குருவின் ஆசி பெறுதல்

மேற்கூறியவாறு மகா கும்பாபிஷேகம் நடைபெறுஞ் சமயம், சிருங்ககிரி ஸ்ரீசாரதா பீடம் ஜகத்குரு ஸ்ரீ அபிநவவித்தியா தீர்த்த சங்கராச்சார்ய சுவாமிகள் அவர்கள் திருச்சிக்கு விஜயம்செய்திருந்ததை நடராஜ ரெட்டியார் அறிந்து, அவர்களிடம் சென்று மிகுந்த மரியாதைகளுடன் வணக்கஞ் செய்து கொப்பமாபுரி ஆலய கும்பாபிஷேகத்திற்கு வருகைதந்து சிறப்பிக்க வேண்டும் என்று வேண்டிக்கொண்டனர். ஸ்ரீ ஜகத்குரு அவர்கள் நடராஜ ரெட்டியாரின் வேண்டுகோட்கு இணங்கி, வருகை தந்தனர். அவ்வாறு வருகை தந்தபோது நடராஜ ரெட்டியார் சகல மரியாதைகளுடன் எதிர்கொண்டு அழைத்துவந்து கும்பாபிஷேக தரிசனம் செய்யவைத்தனர். அதன்பின் சிறந்த பீடத்தில் அவர்களை எழுந்தருளச் செய்து, பாத காணிக்கை வைத்தல் முதலிய சகல உபசாரங்களையும் புரிந்து, நடராஜ ரெட்டியாரும், ருக்மணியம்மையாரும், இராமதுரை ரெட்டியாரும், யசோதையம்மையாரும் இதரபந்து ஜனங்களுடன் நமஸ்காரங்கள் புரிந்தனர்.

ஸ்ரீ ஜகத்குரு அவர்கள் மிகுந்த சந்தோஷமடைந்து, அவர்கள் அனைவருக்கும் பிரசாதங்கள் வழங்கி, ஆசீர்வாதங்கள் புரிந்தனர்.

நடராஜ ரெட்டியாரும், ருக்மணியம்மையாரும், இராமதுரை ரெட்டியாரும், யசோதையம்மையாரும், இதர பந்து ஜனங்களும் ஸ்ரீ ஜகத்குரு அவர்களின்

பிரசாதங்களையும் ஆசிர்வாதங்களையும் மிகுந்த பக்தி சிரத்தையுடன் பெற்றுக்கொண்டு மகிழ்ச்சியடைந்த னர்.

பின்பு நடராஜ ரெட்டியார் கும்பாபிஷேகத்தின் பின்தொடர்ந்துநடைபெறவேண்டிய மண்டலாபிஷேக விசேட பூசனைகளையும் சிறப்புறச் செய்துகொண்டு இருந்து வந்தனர்.

## ஸ்ரீ இராம ருக்மணியம்மையாரின் அன்னையாராகிய சிவகாமியம்மையார் வைகுண்ட பதவியடைதல்

பின்பு ருக்மணியம்மையாரின் அன்னையாராகிய சிவகாமியம்மையார் சிறிது சரீர அசௌகரியம்போல் இருந்து, ஆங்கிலம் 1970ஆம் வருஷம் ஏப்ரல் மாதம் 15ஆம் தேதி, தமிழ் சாதாரண வருஷம், சித்திரை மாதம் 2ஆம் தேதி புதவாரம், பூர்வபக்ஷம், நவமிதிதி, ஆயிலிய நக்ஷத்திரம், ஸ்ரீ இராமநவமி வருஷ விழா நாளில் உதயாதி நாழிகை 10க்குச் சரியான மணி 10க் குப் பல சாதுக்களும், பக்தர்களும் நிரம்பிஇருந்து மனை யிலிருந்த ஸ்ரீ இராமச்சந்திர பகவானுக்கு விசேட பூச னைகளும் பஜனைகளும் நடைபெற்றுக் கொண்டிருக்குங் காலத்தில் வைகுண்ட பதவியடைந்தனர்.

## நடராஜ ரெட்டியார் ஆலய தர்மகர்த்தர் பதவியை இராஜிநாமாச் செய்தல்

பின்பு நடராஜரெட்டியார் ஸ்ரீகுங்குமாம்பிகாசமேத சத்தரிஷீசுவர சுவாமி ஆலயத்தின் பூசனையாதிகளைச் சிறப்புற நடைபெறச் செய்துகொண்டிருந்து, விரோதி கிருது வருஷம், ஆங்கிலம் 1971ஆம் வருஷம், தமது

தர்மகர்த்தர் பதவியை இராஜிநாமாச்செய்து இந்து சமய அறநிலையப் பாதுகாப்புத் துறையினரிடம் ஒப்ப டைத்து, அவர்களைப் பரிபாலனம் செய்து வரும்படி ஏற்பாடு செய்தனர்.

## ருக்மணியம்மையாரும் நடராஜ ரெட்டியாரும், இராமாசிரமத்திற்குச் செய்த அறப்பணிகளும்

## இதர அறப்பணிகளும்

ஸ்ரீ இராம ஆசிரமத்தின் திருப்பணி.

ஸ்ரீ இராம ஆசிரமத்தில் ஸ்ரீ இராமச்சந்திர பகவானது பட்டாபிஷேக சித்திர மூர்த்தத்தை ஸ்தாபனஞ் செய்தல்.

ஸ்ரீ இராமாசிரமத்தின் பூசனையாதி செலவுகட்கு வேண்டிய விளைநிலங்கள் ஏற்படுத்தல்.

கொப்பமாபுரி ஸ்ரீ கிருஷ்ண பஜனைமடம் சீரமைப் புத் திருப்பணியும் கும்பாபிஷேகமும் செய்தல்.

கொப்பமாபுரி ஸ்ரீ குங்குமாம்பிகா சமேத சத்தரிஷீசுவர சுவாமி திருக்கோயில் சீரமைப்புத் திருப்பணியும் கும்பாபிஷேகமும் செய்தல்.

ருக்மணியம்மையாரின் குலதெய்வமாகிய கொப் பம்பட்டி ஸ்ரீ மாவடியார் கோயில் திருப்பணியும் கும்பாபிஷேகமும் செய்தல்.

கொப்பம்பட்டி பிரசவ ஆஸ்பத்திரி கட்டிடப் பணிக்கு நன்கொடை வழங்குதல்.

கொப்பம்பட்டி ஹையர் எலிமெண்டரி ஸ்கூல் கட்டிடப் பணிக்கு நன்கொடை வழங்குதல்.

வைரிசெட்டிப்பாளையம் விவேகானந்தா ஹைஸ்கூல் கட்டிடப்பணிக்கு நன்கொடை வழங்குதல்.

வைரிசெட்டிப்பாளையம் காமாக்ஷியம்மன் கோயில் கட்டிடச் சீரமைப்புத் திருப்பணிக்கு நன்கொடை வழங்குதல்.

செவந்தாம்பட்டி மதுரை வீர சுவாமி கோயில் எலக்ட்ரிக் விளக்குகள் போட நன்கொடை வழங்குதல்.

எசனையூர் மதவானையம்மன் கோயில் கட்டிடச் சீரமைப்புத் திருப்பணிக்கு நன்கொடை வழங்குதல்.

நன்னிலம் ஸ்ரீ நாராயண தாண்டவேசுவர சுவாமி ஆலயத்தின் சீரமைப்புத் திருப்பணிக்கும் கும்பாபி ஷேகத்திற்கும் நன்கொடை வழங்குதல்.

துறையூர் ஸ்ரீ கருணையானந்த சுவாமிகள் மடம் திருப்பணிக்கு நன்கொடை வழங்குதல்.

திருவாரூர் ஸ்ரீகுரு தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் ஆலய சீரமைப்புத் திருப்பணிக்குநன்கொடை வழங்கு தல்.

திருக்களர் ஸ்ரீ பாரிஜாதவனேசுவர சுவாமி ஆலய கும்பாபிஷேகத்திற்கு நன்கொடை வழங்குதல்.

தஞ்சாவூர் ஸ்ரீ பாலைய ஞான தேசிக சுவாமிகள் ஆலயச் சீரமைப்புத் திருப்பணிக்கு நன்கொடை வழங்குதல் முதலியன.

(ஸ்ரீ இராம ருக்மணியம்மையார் சிரத்தையுடன் புரிந்து வந்த ஸ்ரீ ராம பக்தியின் மகிமையாலான ஸ்ரீ இராமச்சந்திர பகவானது கிருபா கடாக்ஷத்தால், குருவாகிய ஸ்ரீ மகா. கோவிந்த சுவாமிகளின் வருகையும் அவர்களை ருக்மணியம்மையாரும் நடராஜ ரெட்டியாரும் வரவேற்றுக் குருவாகக் கொண்டு வேதாந்த பக்தி ஞான சாஸ்திர உபதேச பாட போதனைகளைக் கேட்டு வருதலும்)

இவ்வாறு ருக்மணியம்மையாரும் நடராஜ ரெட்டியாரும் சிறந்த முறையில் பகவத் பூசனையாதிகளைச் செய்து கொண்டும், அறப்பணிகளைப் புரிந்து கொண்டும் இருந்து வருங்காலத்தில், சார்வரி வருஷம் மாசி மாதம் 3 ஆம் தேதி (ஆங்கிலம் 1961 ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் 14 ஆம் தேதி) ஸ்ரீ ஜகத்குரு சங்கராச்சார்ய சுவாமிகளின் அத்வைத ஞான குரு பரம்பரையைச் சேர்ந்த, கோயிலூர் மடாலயத்தின் குருபீடாதிபதியான ஸ்ரீ மகா தேவ ஞான தேசிக சுவாமிகளின் சீடரான, ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகள் நன்னிலம் ஸ்ரீ நாராயண தாண்டவேசுவர சுவாமி ஆலயத்திற்குத் தாம் தர்மகர்த்தராக இருந்து செய்யும் சீரமைப்புத் திருப்பணிக்காகப் பொருளுதவி பெறும் பொருட்டுக் கொப்பமாபுரி ருக்மணியம்மையார் நடராஜ ரெட்டியார் அவர்களின் மனைக்கு வந்து அவர்களைச் சந்தித்துப் பொருளுதவி கேட்டுப் பெற்றுக் கொண்ட போது, நடராஜ ரெட்டியாரும் ருக்மணியம்மையாரும் ஸ்ரீ மகா. கோவிந்த சுவாமிகளிடம், தாங்கள் இங்கு வந்து தங்கியிருந்து, எங்கட்கு வேதாந்த பக்தி ஞான சாஸ்திர உபதேசங்களைப் போதனை புரியவேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். அதற்கு ஸ்ரீ மகா

கோவிந்த சுவாமிகள் சம்மதம் கூறி, நன்னிலம் போய்த் திருப்பணியைக் கவனித்துக் கொண்டும், ஓய்வு இருக்குங் காலங்களில் கொப்பமாபுரி வந்திருந்து வேதாந்த பக்தி ஞான சாஸ்திரங்களின் உபதேச பாடபோதனை செய்து கொண்டும் வருவதாகத் தெரிவித்துவிட்டு, நன்னிலம் சென்று திருப்பணியைச் சிறப்பாக நடைபெறச் செய்து கொண்டும், இடையில் ஓய்வு இருக்குங் காலங்களில் கொப்பமாபுரிக்கு வந்திருந்து வேதாந்த பக்தி ஞான சாஸ்திர உபதேச பாடபோதனை செய்து கொண்டும் இருந்து, நன்னிலம் ஆலயத் திருப்பணியையும், அவ்வாலயத்தைச் சேர்ந்த கைவல்லிய நவநீத பாட மண்டபத் திருப்பணியையும் சிறப்புறச் செய்து முடித்து, கீலக வருஷம் ஆவணி மாதம் 20 ஆம் தேதி (ஆங்கிலம் 1968 ஆம் வருஷம் செப்டம்பர் மாதம் 4 ஆம் தேதி) புதவாரம் பூர்வபக்ஷம், திரயோதசி திதி, திருவோண நக்ஷத்திரம், சித்தயோகம், விருச்சிக லக்கினம், கூடிய சுபயோக சுபதினத்தில் உதயாதி நாழிகை 12 க்கு மேல் 15 க்குள் (மணி $10\frac{3}{4}$ க்கு மேல் 12 க்குள்) மகா கும்பாபிஷேகம் மிகவும் சிறப்பாக நடைபெறச் செய்தனர்.

பின்பு ஸ்ரீ மகா. கோவிந்த சுவாமிகள் நன்னிலம் ஸ்ரீ நாராயண தாண்டவேசுவர சுவாமி ஆலயத்தின் நித்தியபூசனைகளும், நைமித்திகபூசனைகளும், வைகாசி மாதம் விசாக நக்ஷத்திரத்தன்று நடைபெறக் கூடிய ஆண்டுக் குருபூசை விழாக்களும் எப்போதும் சிறப்பாக நடை பெறும்படியான ஏற்பாடுகளும் செய்து முடித்து தமது தர்மகர்த்தர் பதவியை ராஜிநாமாச் செய்து, இந்து சமய அறநிலையப் பாதுகாப்புத் துறையினரின் மூலமாக வேறு தர்மகர்த்தரை நியமனஞ்

செய்து பரிபாலனம் செய்து வரும்படி ஏற்பாடு செய்து விட்டனர்.

**ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகள்**
**கொப்பமாபுரி வந்து தொடர்ந்து தங்குதல்**

பின்பு ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகள் சாதாரண வருஷம் வைகாசி மாதம் 25 ஆம் தேதி (ஆங்கிலம் 1970 ஆம் வருஷம் ஜூன் மாதம் 8 ஆம் தேதி) திங்கட்கிழமை கொப்பமாபுரிக்கு வந்து தொடர்ந்து தங்கியிருந்து வருகின்றனர்.

**ஸ்ரீ இராம ருக்மணியம்மையாரும்**
**ஸ்ரீ நடராஜ ரெட்டியாரும் உபதேசபாடபோதனை கள் கேட்டலும், ஸ்ரீ மகா, கோவிந்த சுவாமிகட்கு உபசாரம் செய்தலும்**

பின்பு ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகளிடம் ருக்மணி யம்மையாரும் நடராஜ ரெட்டியாரும் வேதாந்த பக்தி ஞான சாஸ்திர உபதேச பாட போதனைகள் கேட்டுக் கொண்டும், ஸ்ரீ இராம ஆசிரமத்தில் ஏகாந்த வாசமாய் ஆத்மானுசந்தான தியானம் செய்து வரும் ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகட்கு வேண்டிய உபசாரங்களைச் சிரத்தையுடன் செய்து கொண்டும் இருந்து வருகின்றனர்.

**ஸ்ரீ இராம ருக்மணியம்மையார் தீக்ஷா நாமம் பெற்று, வேதாந்த பக்தி ஞான சாஸ்திர உபதேச பாட போதனை கள் கேட்டு, அப்பியாசம் செய்து வந்த விபரங்களின் தொகுப்பு.**

## ஸ்ரீ இராம ருக்மணியம்மையாருக்குத் தீக்ஷா நாமம் அமைத்தலும், உபதேசமும்

ருக்மணியம்மையாருக்கு வேதாந்த ஞான உபதேசம் புரிய விரும்பிய ஸ்ரீ மகா. கோவிந்த சுவாமிகள் ஆன்றோரின் குரு பரம்பரை வழக்கப்படி முதலில் ருக்மணியம்மையாருக்குத் தீக்ஷா நாமம் அமைக்க விரும்பி, பிலவ வருஷம் ஆவணி மாதம் 30 ஆம் தேதி (ஆங்கிலம் 1961 ஆம் வருஷம் செப்டம்பர் மாதம் 14 ஆம் தேதி) குருவாரம் — ருக்மணியம்மையார் ஸ்ரீ இராமச்சந்திர பகவானையே சிறந்த பக்தி பூர்வகம் உபாசனை தெய்வமாகவும், குருவாகவும் கொண்டு ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகளாகிய குருவையும் ஸ்ரீ இராம கலையாகவே கொண்டு, சிறந்த பக்தி சிரத்தையுடன் இருந்து வந்த காரணத்தால், "ஸ்ரீ இராம ருக்மணியம் மையார்" என்னும் தீக்ஷா நாமம் அமைத்தனர்.

இவ்வாறு தீக்ஷா நாமம் அமைத்த அன்றே ருக்மணியம்மையாருக்கு, ஸ்ரீ மகா. கோவிந்த சுவாமி கள் வேதாந்த ஞான உபதேசம் புரிய ஆரம்பித்து, ஸ்ரீ பகவத் கீதை உரைப்பாடம் போதித்தல் ஆரம்பஞ் செய்தனர். இவ்வாறு ருக்மணியம்மையார் தீக்ஷா நாமம் பெற்று, அன்றே ஸ்ரீ பகவத் கீதை உரைப்பாடம் கேட்டல் ஆரம்பித்து, பிலவ வருஷம் கார்த்திகை மாதம் 2 ஆம் தேதி (ஆங்கிலம் 1961 ஆம் வருஷம் நவம்பர் மாதம் 17 ஆம் தேதி) சுக்கிரவாரம் பூர்த்தி செய்தனர். அதன்பின் நாநா ஜீவ வாதக் கட்டளை உரைப்பாடமும் அதில் கூறும் அத்தியாசம் முதலிய வைகளின் இலக்கணங்களும் மகாவாக்கிய விசார விபரங்களும் கேட்டனர். அப்போது ஸ்ரீ மகாகோவிந்த

சுவாமிகள் ருக்மணியம்மையாருக்கு 'தத்துவம் அஸி' என்னும் உபதேச மகா வாக்கியார்த்தத்தை உபதேசம் செய்து, ஆத்மப் பிரம்ம ஐக்கிய ஞான அனுபூதியுண் டாகும் அப்பியாச முறைகளேயும் விளக்கமாக அறிவித் தனர். அவ்வாறு உபதேசஞ் செய்து அறிவித்த அனு பூதி முறைகளே ருக்மணியம்மையார் சிரத்தையுடன் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தனர். பின்பு கீதாசாரத் தாலாட்டு, சசிவன்ன போதம், கைவல்லிய நவநீதம், விசார சந்திரோதயம், பால போதம், விசாரசாகரம், பஞ்சதசி, ஜீவன் முக்தி விவேகம், ஆத்மபோதம், வேதாந்த சித்தாந்த சாரசங்கிரகம், விவேக சூடாமணி, ஆத்மா நாத்ம விவேகம், பஞ்சீகரணுதி, வாசுதேவ மனனம், அத்வைத போத தீபிகை, ஸ்ரீ இராமகீதை, முக்திகோபநிஷத்து முதலிய நூல்களே உரைப்பாடம் கேட்டுப் பூர்த்தி செய்தனர். பின்பு விரோதிகிருது வருஷம் ஆடி மாதம் 17-ஆம் தேதி (ஆங்கிலம் 1971 ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 2 ஆம் தேதி) சோமவாரம் ஞான வாசிட்டம் உரைப்பாடம் கேட்டல் ஆரம்பித்து, விரோதிகிருது வருஷம் கார்த்திகைமாதம் 16 ஆம் தேதி (ஆங்கிலம் 1971 ஆம் வருஷம் டிசம்பர் மாதம் 2ஆம் தேதி) குருவாரம் பூர்த்தி செய் தனர். இவ்வாறு ஞானவாசிட்டம் உரைப்பாடம் கேட் டுப் பூர்த்தி செய்ததுடன் பாடம் கேட்டலாகிய சிரவ ணம் முடிந்தது.

## ஸ்ரீ இராம ருக்மணியம்மையார் ஞானநிட்டை அப்பியாச அனுபூதியடைந்து வாழ்தல்

இவ்வாறு ஞானேபதேச சிரவணம் கேட்டவாறு, மனனம், நிதித்தியாசனம், மகாவாக்கிய விசாரம்

செய்து, ஸ்ரீ பகவானது அதிஷ்டமான சொரூபமாகிய சச்சிதானந்த பிரம்ம சொரூப ஞான நிட்டையாகிய அப்பியாசம் செய்து, அனுபூதியடைந்து வாழ்ந்து வரு கின்றனர்.

ருக்மணியம்மையார் நடராஜ ரெட்டியார் ஆகிய தம்பதிகள், சாதுசங்க மகிமையை அறிந்து அனு சரித்த முறை வருமாறு.

சசிவன்னபோதம்—

"புணர்ந்த பாவமெ லாம்பரி பூரணம்
உணர்ந்த ஞானி விழிபட ஓடுமே"

(இதன்பொருள்)-(மனம் வாக்குக் காயம் என்னும் முக் கரணங்களால் செய்யப்பட்டு அந்தக் கரணத்தில்) பொருந்தியுள்ள, சஞ்சித பாபகர்மங்கள் அனைத்தும், பரிபூரண பிரம்மத்தை (ஆன்மவடிவாய்ச்) சாக்ஷாத் கரித்து அறிந்த ஞானியின் கிருபா நோக்கம் பட்ட வுடன் நீங்கும்.

ஸ்ரீ ஜகத்குரு ஆதி சங்கராச்சார்ய சுவாமிகள் இயற்றிய பஜகோவிந்தம்—

"ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்
நிஸ்ஸங்கத்வே நிர்மோகத்வம்
நிர்மோகத்வே நிச்சலதத்வம்
நிச்சலதத்வே ஜீவன்முக்தி.

(இதன் பொருள்)-சத்சங்கம் உண்டானபோது சகல விஷயப் பற்றின் ஒழிவு உண்டாகிறது; அந்த விஷயப் பற்றின் ஒழிவினல் அஞ்ஞானமோகம் நசிக்கிறது; அந்த அஞ்ஞானமோகம் நசித்தலால் நிச்சல தத்வ

மாகிய பரமாத்மதத்துவம் தோன்றுகிறது; பரமாத்ம தத்வம் தோன்றுதலால் ஜீவன் முக்தி(அதாவது ஜீவித்திருக்கும் போதே சர்வதுக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்தியாகிய மோக்ஷம்) உண்டாகிறது.

என்பவை முதலான சாஸ்திரங்களின் அறிவுரைகளில் உண்மை ஞானிகளாகிய சாதுக்களின் சங்கமூலமான அறிவுரைகளைக் கேட்டு உணர்வதால் ஸ்ரீ பகவானது சொரூப ஐக்கிய ஞானமோக்ஷம் உண்டாகின்றது என்று சாது சங்க மகிமையைக் கூறியுள்ளதைக் கற்று அறிந்தவர்களாதலால், அவ்வாறு உண்மை ஞானிகளாகிய சாதுக்களை வரவேற்று உபசரித்து, வேதாந்த பக்தி ஞான சாஸ்திரார்த்தங்களைப் பக்திசிரத்தையுடன் வினவிக் கேட்டுணர்வதற்கான சத்சம்பாஷணைகள் புரிந்துகொண்டு வந்தனர்.

இவர்களது வீட்டிற்கு வருகின்ற பந்து ஜனங்கட்கு நன்கொடைகள் கொடுக்க வேண்டியவைகளிருந்தாலும் சாதுக்கள் முதலியவர்களுக்கு நன்கொடைகள் கொடுக்க வேண்டியவைகளிருந்தாலும், நடராஜ ரெட்டியார் அவர்களே அக்காரியங்கள் அனைத்தையும் கவனித்துச் செய்துவருவார்களேயன்றி, ருக்மணியம்மையார் அக்காரியங்களைக் கவனிப்பதும் செய்வதுமில்லை.

ஆகவே ருக்மணியம்மையார் ஆதிகாலம் முதல் எந்நேரமும் சிரவணம் மனனம், நிதித்தியாசனம்,மகாவாக்கிய விசாரம், ஸ்ரீ பகவானது அதிஷ்டான சொரூபமாகிய சச்சிதானந்த பிரம்ம சொரூப ஞான நிட்டை ஆகியவைகளைச் செய்துகொண்டு வருகின்றனர்.

இவ்வாறு ருக்மணியம்மையார் சிரவண மனன நிதித்தியாசன விசாரநிட்டை யாகியவைகளைச் செய்து கொண்டு வருவதற்கு வேண்டிய அனுகூலமான காரியங்கள் அனைத்தையும், நடராஜ ரெட்டியார் அவர்களே செய்து வருகின்றனர்.

ஸ்ரீ நடராஜ ரெட்டியார், ஸ்ரீஇராம ருக்மணியம்மையார் வரலாறு முடிந்தது,

முதற்பகுதி வரலாறுகள் முடிந்தன.

———

# இரண்டாம் பகுதி அறிவுரைகள்

**ஸ்ரீ ராமாஸ்ரமத்தில் நடைபெறும் சொற்பொழிவுகளில் பொருந்திய ஆன்ரோர் நூல்களின் அறிவுரைகளிற் சில பகுதிகள் வருமாறு**

## 1. சிந்முத்திரார்த்தம் (சிந்முத்திரையின் பொருள்)

சிந்முத்திரைப் படம்




கையிலுள்ள சிறு விரலேயும் மோதிர விரலேயும் நடுவிரலேயும் விலக்கிச் சுட்டுவிரலின் நுனியையும் பெருவிரலின் நுனியையும் சேர்த்து ஒன்றுபடுத்திக் காட்டுவது சிந்முத்திரையாம்.

இந்தச் சிந்முத்திரையைஸ்ரீ ஆதி குருதக்ஷிணுமூர்த்தி, ஸ்ரீ இராம பகவான், ஸ்ரீ கிருஷ்ண பகவான், ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள்முதலிய சற்குரு மூர்த்திகளின் உபதேசக்கோல உருவங்களில் காணலாம்.

சித்முத்திரை-சிந்முத்திரை-ஞானமுத்திரை, - சீடர்கள் சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தியாகிய முக்தி என்னும் பேரின்ப வீடுஅடையும் பொருட்டு, குரு மூர்த்திகள் கையில் அமைத்துக்காட்டி அறிவிக்கும் சிந்முத்திரை அறிவிப்பின் விபர விளக்கம் வருமாறு:— இங்குள்ள சிந்முத்திரைச் சித்திரத்தில் குறிப்பிட்டுள்ள எண்கள் விரல்களின் விபரங்களைக் குறிப்பனவாம்.

5. சிறுவிரல்-மலம் என்னும் பாபகர்மத்தைக் குறிக்கும். சிறுவிரலை விலக்கிக் காட்டுவதால் ஈசனைக் குறித்துச் செய்யும் நிஷ்காம புண்ணிய கர்மத்தினால், மலம் என்னும் பாபகர்மத்தை விலக்க வேண்டும் என அறிவிப்பதாம்.

4. மோதிர விரல்-விக்ஷேபம் என்னும் சித்தசஞ் சலத்தைக் குறிக்கும், மோதிர விரலை விலக்கிக் காட்டு வதால், ஈசனைக் குறித்துச் செய்யும் நிஷ்காம உபாசனை யால், விக்ஷேபம் என்னும் சித்த சஞ்சலத்தை விலக்க வேண்டும் என அறிவிப்பதாம்.

3. நடுவிரல்-அஞ்ஞானம் என்னும் அறியாமை யைக் குறிக்கும். நடுவிரலை விலக்கிக் காட்டுவதால், சீவஈசுரயதார்த்த சொரூபமான ஆத்ம பிரம்ம ஐக்கிய சொரூபத்தை அறிவதாகிய ஞானத்தால், அஞ்ஞானம் என்னும் அறியாமையை விலக்கவேண்டும் என அறி விப்பதாம்.

இங்குக்கூறிய ஆத்ம பிரம்ம ஐக்கிய (ஏக) சொரூபத்தை அறிவதாகிய ஞான விபரம் வருமாறு :—

2. சுட்டுவிரல்-சீவனைக் குறிக்கும். } சுட்டுவிரல் நுனி
1. பெருவிரல்-ஈசனைக் குறிக்கும். } யையும்பெருவிரல்
நுனியையும் சேர்த்து ஒன்றுபடுத்திக் காட்டுவதால்

முறையே சீவனின் கற்பனுபாகம் நீங்கிய சச்சிதானந்த சொரூப ஆன்மாவும், ஈசனின் கற்பனுபாகம் நீங்கிய சச்சிதானந்த சொரூபப் பிரம்மமும் ஏகமே (ஒன்றே) யாம். ஆகவே தத்துவம் அசி—அது நீயாக இருக்கிருய்; அதாவது சச்சிதானந்தப் பிரம்மமாகிய அது சச்சிதானந்த ஆன்மாவாகிய நீயாக இருக்கிருய். இவ்வாறு அறிந்து முக்தியாகிய பேரின்பவீடு அடைவாயாக என அறிவிப்பதாம்.

மேற்கூறிய சிந்முத்திரைப் பொருளையறிவிக்கும் அறிவுரைகள்.

சிவஞான வள்ளலார் சாத்திரம் உபதேசமாலை
ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி வணக்கம்

சீவ பரமிரண்டும் தேருமிடத்(து) ஏக(ம்) என்று
மேவியசின் முத்திரைகொள் மென்கரத்தால்—ஓவில்
வழக்கறுத்தான் பல்சமய வாதிகளே காண்மின்
மழுக்கரத்தில் ஏந்தியஎம் மான்.

ஷை சாத்திரத்தில் ஞான விளக்கம்

சத்தும் அசத்தும் சதசத்தும் நீயல்ல
சுத்தசிவம் நீயென்று சொல்லினுன்
—மொய்த்தெழுந்த
கல்லாலின் கீழிருந்து காணகதி நால்வர்க்கும்
சொல்லாமல் சொன்ன துரை.

சத்தும் அசத்தும் சதசத்தும் முன்காட்டிச்
சத்தும் அசத்தும் சமமாக்கிச்—சத்தசத்தும்
இல்லா இடத்தில் எனதொழிவைக் காட்டிற்று
கல்லாலின் கீழிருந்த கை.

ஷ சாத்திரத்தில் பதி பசு பாசவிளக்கம்
மகாவாக்கிய இலக்கணம் :—

நாலு வேதமும் தத்துவ மசியெனல் நவிலும்
சால நீர்தெளிந் துறுதிகொள் வீரெனச் சாத்திப்
பால லோசனன் மவுனமுற் றிருந்தனன் பருவக்
கோல நால்வரும் நிட்டையைக் கூடினர் அன்றே.

**ஷ சாத்திர ஞான விளக்கத்தில் ஈசுர பத்தி**

ஈசன்வே(று) யான்வே(று) என்(று) எண்ணும்
கடையினங்கள்

ஈச(ன்)அடி என்னும் இடையினங்கள்—ஈசனே
ஆனேம் என்(று) ஏமாக்கும் ஆயில் தலையினங்கள்
ஆனதை மாணு அறி.

**ஸ்ரீதாயுமானவர் பாடல் — நின்றநிலை.**

இருக்காதி மறைமுடிவும் சிவாக மாதி
இதயமும்கை காட்டெனவே இதயத் துள்ளே
ஒருக்காலே உணர்ந்தவர்கட்(கு) எக்கா லுந்தான்
ஒழியாத இன்பவெள்ளம் உலவா நிற்கும்.

கற்றதும்கேட் டதும்தானே ஏதுக் காகக்
கடபடம்என்(று) உருட்டுதற்கோ கல்லால்
எம்மான்
குற்றமறக் கைகாட்டும் கருத்தைக் கண்டு
குணம்குறியற்(று) இன்பநிட்டை கூட அன்றோ.

**2. [மூவித பக்தி]**

அத்தியாத்ம ராமாயணம் — ஸ்ரீராமஹிருதயம் —
விளக்கவுரை.

பக்தியானது — அன்னிய பக்தி, அனன்னிய
பக்தி, ஏகாந்த பக்தி என மூன்று விதமாம்.

[அன்னிய பக்தி வருமாறு]

எங்கும் பரிபூரணமாக நிறைந்துள்ள கடவுளி னுடைய அநேக அவதாரங்களில் சிவாவதாரம். விஷ்ணு அவதாரம் முதலிய வடிவங்களைச் சிற்ப சாஸ்திரங்களில் கூடிய லக்ஷணத்தின்படி, கல், செம்பு, வெள்ளி, பஞ்சலோகம், மரம், படம் முதலி யவைகளில் அமைத்து, ஆலயத்திலாவது, மடத்தி லாவது, வீட்டிலாவது வைத்து அதனைக் கடவுள் சொரூபமாகப் பாவித்து மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரண சுத்தியாகவும், தனக்கு அன்னியமாகவும் (வேருகவும்) கருதி, பக்தியுடன் கூடிய நவ(ஒன்பது) விதங்களால் ஆராதனை செய்வதாம்.

இவ்வாறு ஒரே அன்னிய பக்தியின் உட்பிரிவு களாகிய ஆராதனைகள், நவ(ஒன்பது) விதமாக இருப் பதைக் குறித்து, இந்த ஒரே அன்னிய பக்தியை நவவித பக்தி என்றும் கூறுவர்.

[நவவிதபக்தி வருமாறு]

சுலோகம் —

ச்ரவணம் கீர்த்தனம் விஷ்ணோ : ஸ்மரணம்
பாதஸேவனம்
அர்ச்சனம் வந்தனம் தாஸ்யம் ஸக்யமாத்ம
நிவேதனம்.

இதன் பொருள்

1 ஸ்ரீ பகவானின்-ச்ரவணம், 2 கீர்த்தனம், 3 ஸ்மரணம், 4 பாதஸேவனம், 5 அர்ச்சனம்,

6 வந்தனம், 7 தாஸ்யம் 8 ஸக்யம், 9 ஆத்ம நிவேதனம் என்பன நவவித பக்தியாம்.

**இவற்றின் விளக்கம் வருமாறு**

1 சிரவணம்-பகவானது அனந்த கல்யாண குண அவதார சரிதங்களைக் காதினால் கேட்டல்.

2 கீர்த்தனம்-பகவானது துதிக் கீர்த்தனைகளை வாக்கினால் பாடுதல்.

3 ஸ்மரணம்-பகவானைப் பரிசுத்தமான மனதினால் நினைத்தல்.

4 பாதஸேவனம்-பகவானது பாதங்களைச் சேவித்தல்.

5 அர்ச்சனம்-பகவானது பாதங்களை அஷ்டோத்ர சத நாமம், சகஸ்ரநாமம் முதலியவைகளால் அர்ச்சனை செய்தல்.

6 வந்தனம் - பகவானை இரண்டு கால், இரண்டு கை, இரண்டு தோள், மார்பு, நெற்றி என்னும் எண் வகை உறுப்புக்களும் பூமியிற் பட நமஸ்காரம் செய்தலாகிய அஷ்டாங்க நமஸ்காரம் அல்லது இரண்டு கால், இரண்டு கை நெற்றி என்னும் ஐவகை உறுப்புக்களும் பூமியிற் பட நமஸ்காரம் செய்தலாகிய பஞ்சாங்க நமஸ்காரம் செய்தல்.

7 தாஸ்யம் - பகவானைத் தன்னை ஆண்டு கொண்ட ஆண்டானாகவும், தான் அவனது அடிமையாக வும் கருதித் தொண்டு செய்தல்.

8 ஸக்யம் - பகவானிடத்தில் இயன்றவரை மிகுந்த அன்பு வைத்தல்.

9 ஆத்மநிவேதனம்-பகவானுக்குத் தேகாதி யாவற் றையும் அர்ப்பணம் செய்தல்.

### அனன்ய பக்தி வருமாறு

விராட் புருஷனாகிய பகவானுக்கு அன்னியமாக யாதொரு பிரபஞ்சமும் இல்லை. சர்வமும் பகவானது சொரூபமே என்று அகண்டமாகப் பாவித்து, மன தினால் தியானஞ் செய்தல்.

### ஏகாந்த பக்தி வருமாறு

ஸ்ரீபகவத்கீதை 6ஆம் அத்தியாயம் 31ஆம்

சுலோகம்

ஸர்வபூத ஸ்த்திதம் யோமாம்
பஜத்யேகத்வ மாஸ்த்தித : |
ஸர்வதா வர்த்தமா னோபி
ஸயோ கீ மயி வர்த்ததே ॥

### இதன் பொருள்

எந்த யோகி சர்வ பூதங்களிலு முள்ள தத்பதார்த் தமாகிய என்னைத் துவம் பதார்த்தமாகிய தன்னோடு அபேதம் (ஏகம்) என்று நிச்சயித்து அபரோட்

சஞ்செய்கின்றனோ அந்த யோகி புருஷன் பலவாறாய் விவகரிப்பினும் பரமாத்மாவாகிய என்னிடத்திலே அபேத வடிவமாய் அஃதாவது ஏக வடிவமாய் இருக்கின்றான் (என்பதாம்).

இவ்வாறு கீதையில் ஸ்ரீபகவான் கூறியபடி "தத்துவமசி" என்னும் மகாவாக்கிய உபதேசம் கேட்டு, "அகம்பிரம்மாஸ்மி" என்னும் மகாவாக்கிய விசாரம் செய்து அனுபூதி யடைந்து, சர்வம் பகவத் சொருபமாகிய பிரம்மமாத்திரமான ஏகமே என்று அறிவதாகிய சீவ ஈசுர ஐக்கிய ஞானமே ஏகாந்த பக்தியாம்.

இத்தகைய சீவ ஈசுர ஐக்கிய ஞானத்தையே அனன்னிய பக்தியின் பூரண நிலையாகிய பூரணானன்னிய பக்தி யென்றும் கூறுவர்.

இந்த ஏகாந்த பக்திக்கு உதாரணம்

விவேக சூடாமணி (ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகள்)

முத்தியின் ஏது வாக மொழியுபா யங்க ளுள்ளே
பத்தியே மிகவும் மேலாய்ப் பகரலாம் அஃதே
தென்னில்
நித்தமும் சொச்சொ ரூபம் நிகழ்த்திய அனுசந் தானம்
பக்திதான் ஆகும் என்றே பகருவர் பரம் உணர்ந்தோர்.

ஷ்டி கவிக்கு உரிய — சுலோகம்

மோக்ஷ காரண-ஸாமக்ர்யாம் பக்திரேவ கரீயஸீ |
ஸ்வ-ஸ்வரூபானுஸந்தானம் பக்திரித்யபி தீயதே ||

**இதன் பொருள்**

மோக்ஷத்திற்குக் காரணமாகும் ஸாதனங்களுள், பக்தியே சிறந்தது. [அந்தச் சிறந்த பக்தி எது என்னில்] தன்னுடைய உண்மையான ஆத்ம ஸ்வரூபத்தைத் தொடர்ந்து சிந்தித்தலே (ஞானமே) சிறந்த பக்தி என்று மகாத்மாக்களால் கூறப்படுகிறது. (என்றவாறு)

## 3. வேதாந்த ஞானத்திற்கும், வேதாந்த சாத்திர சிரவணுதிகட்கும் உரியவர்கள்

மானச சந்நியாசத்துடன்கூடிய பாகிய சந்நியாசம் உடையவர்கள் ஞான மோக்ஷத்தை யடைவதுபோல, மானச சந்நியாசம் மாத்திரம் உடைய, இல்லறத்தினரான ஆண்களும் பெண்களும் ஞான மோக்ஷத்தையடையலாம் என்னும் ஆன்ருேர் அறிவுரைகள் வருமாறு.

கைவல்லிய நவநீதம்
(ஸ்ரீபொன்னம்பல ஞானதேசிக சுவாமிகள் உரை)

பந்தமனை துறந்துசிலர் அதிதிகளாய்
இருந்தடைவர் பரம ஞானம்
அந்தணர் மன்னவர் வணிகர் சூத்திரராய்
இருந்து சிலர் அடைவர் ஞானம்
இந்தவகைச் சாத்திரத்தும் உலகத்தும்
நடப்பது கண்டிருந்தும் மைந்தா
சிந்தனையின் மயக்கமென்னே சுருதியுக்தி
யனுபவத்தால் தெளிந்திடாயே.

## இதன் பொழிப்புரை

சில பேர் (மமத்துவ அபிமானத்தால்) பந்தரூபமான மனைவி, புத்திரர், தனங்களை (பிரைஷ மந்திர உச்சாரண பூர்வகமாக)ச் சந்நியாசித்து (காஷாய தண்ட தாரணாதி ஆச்சிரம ரூபமான) யதிகளாய் அஃதாவது மானச சந்நியாசத்தோடு கூடிய பாகிய சந்நியாசத்தையுடைய சந்நியாசிகளாய் (குருவையடைந்து) நின்று (ஞானபூமியை அப்பியாசித்துப்) பிரம்மஞானம் அடைவர். (யாதாயினும் ஓர் நிமித்தத்தால் பிரசித்தமான பாகிய சந்நியாசம் செய்து கொள்ளப் பிரதிபந்தம் உடையவரான) சில பேர் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரராய் (மனைவி புத்திரர் ஆதியரோடு கூடித் தத்தம் வருணத்திற்கு உரிய தருமங்களைச் செய்து கொண்டு மேன் மேல் சனனத்தைக் கொடுக்கத் தக்கனவான கரும பலத்தில் இச்சை மாத்திரம் விடுவதான மானச சந்நியாசத்தை உடையவராய்க் குருவையடைந்து) நின்று (ஞானபூமி யப்பியாசத்தால்) பிரம்ம ஞானத்தையடைவர். இந்தப்படி சாத்திரங்களிலும், உலகின் கண்ணும் (முறையே) கூறுவதையும், நடப்பதையும் அறிந்திருந்தும், மைந்தனே (இல்லறத்தில் இருப்பவர்கள் ஞான மோக்ஷத்தையடையார் என்னும் சிலருடைய பிராந்தி வசனத்தால்) உனது மனதின் கண்ணே மயக்கம் உண்டாதல் இஃது என்னே! சுருதியுத்தி அநுபவங்களினாலே, இச்சந்தேகம் ஒழிந்து நித்தியானந்தம் அடைதி — (என்றவாறு).

ஸ்ரீபகவத்கீதை 9ஆம் அத்தியாயம் 22ஆம் கவி.

வணிகரும் மற்றவேளாண்
மாந்தரும் மகளிர் தாமும்
பணிவொடும் என்னைப்பேணிப்
பற்றறுத் திடுவர்என்றல்
அணிமுடி அரசர்மேன்மை
அந்தணர் அடைவர் ஆகில்
தணிவரும் பிறவிதீரச்
சாற்றவேண் டுவதும் உண்டோ,



**இதன் பொழிப்புரை**

(உழவு, வாணிபம் முதலிய லௌகிக வியா பாரத்தில் தற்பரரான) வைசியரும், மற்றைச் சூத்தி ரரும், ஸ்திரீகளும் பக்தியுடனே (பரமேசுரனாகிய) என்னைச் சேவித்து (எனது பக்தியின் பிரபாவத்தால்) பந்தம் விடுத்துப் பரமகதியை யடைவார்கள் என்று சொல்லில் அழகு பொருந்திய கிரீடத்தை யுடைய க்ஷத்திரியரும், உத்தமரான பிராமணரும் (எனது பக்தராய் என்னை) ஆராதனஞ் செய்வரானல் (அவர் எனது பக்தியின் பிரபாவத்தால்) நீங்குதற்கரிய பிறவி யினின்று நீங்கிப் பரமகதியடைவர் என்று சொல்ல வேண்டுவதும் உண்டா? (இல்லை) (என்றவாறு)

**மேற்கூறிய ஸ்ரீபகவத் கீதை 9ஆம் அத்தியாயம் 23ஆம் கவிக்கு உரிய 32 — 33 ஆம் சுலோகங்களும் அவற்றின் பொருள்களும் வருமாறு**

32ஆம் சுலோகம்

மாம்ஹி பார்த்த வ்யபாச்ரித்ய
யேஅபிஸ்யு : பாபயோனய :
ஸ்த்ரியோ வைச்யாஸ்ததா
சூத்ராஸ்தேஅபி யாந்தி பராங் கதிம்.

### இதன் பொருள்

பார்த்தா! ஸ்திரீகளும் வைசியர்களும் அவ்வாறே சூத்திரர்களும், தாழ்பிறவியினர் எவர்களுண்டோ அவர்களுங்கூட என்னைச் சரண் அடைந்து உயர்ந்த கதியை அடைகின்றனர் அன்றோ.

33ஆம் சுலோகம்

கிம் புனர்ப்ராஹ்மணா:
புண்யா பக்தா ராஜர்ஷயஸ்ததா |
அநித்யமஸுகம் லோகமிமம்
ப்ராப்ய பஜஸ்வ மாம் ||

### இதன் பொருள்

புண்யவான்களான பிராம்மணர்களும், அவ்வாறே பக்தர்களான ராஜரிஷிகளும் - நற்கதியையடைவர் என்று - மறுபடி கூறுதல் வேண்டுமோ? அநித்தியமானதும் துக்கமானதும் ஆன இந்த உலக மனுட தேகத்தை அடைந்துள்ள நீ என்னையே பூஜித்துச் சரண் அடைந்து உயர்ந்த கதியாகிய முக்தியை அடைவாயாக.

ஜீவன் முக்தி விவேகம், பிரமாணப் பிரகரணம் தஞ்சாவூர் ஸ்ரீ வி-பிரமானந்த சுவாமிகள் மொழி பெயர்ப்பு (வசனம்)

பிரம்மச்சாரி, கிருஹஸ்தன், வானப் பிரஸ்தன் என்னும் இவர்களுக்கு யாதேனும் ஓர் நிமித்தத்தால் பாகிய சந்நியாச ஆசிரமத்தினைக் கொள்ளுதற்குத் தடையிருந்து தத்தம் ஆசிரம தருமங்கள் அனுஷ்டிக்

கப்படினும்,ஞானத்திற்குஉபயோகமாகிய மானதமான கர்மாதித் தியாகமாகிய மானச சந்நியாசங் கொள்வது விரோதப் படுகிறதில்லை. சுருதி ஸ்மிருதி இதிகாச புராணங்களிலும், லோகத்திலும் அத்தன்மைய தத்துவ ஞானிகள் அநேகர் காணப்படுதலால் விரோதப் படுகிறதில்லை.

[சாதனசதுட்டய சம்பத்தியும் (சாதனம் நான்கின் அடைவும்) மானச சந்நியாசமும் இல்லாதவராய் இல்லறத்தில் இருக்கும் ஆண்களும் பெண்களும் வேதாந்த சாஸ்திர ஆத்மவிசாரம் செய்வதால், ஆத்ம ஞானமோக்ஷம் உண்டாகா தாயினும், பாபமுண்டா காமல் நன்மை பயக்கும் புண்ணியமாகிய பலனே உண்டாகும்; என்னும் ஆன்ருேர் அறிவுரைகள் வருமாறு.]

ஸ்ரீ ஜகத்குரு ஆதிசங்கராச்சார்ய சுவாமிகள் அருளிய, ஆத்மா நாத்ம விவேகம். தஞ்சாவூர் ஸ்ரீ வி. பிரமானந்த சுவாமிகள் மொழி பெயர்ப்பு.

வினு : துக்கங்கட்கு நிவிர்த்தி எப்போது உண்டாகும்?

விடை : சரீரத்தைக் கொள்ளுதல் முற்றும் நாசமான போது துக்கங்களின் நிவிர்த்தியுண்டாகும்.

வினு : முற்றும் என்று சொல்வானேன் ?

விடை : சுழுத்தியவஸ்தையில் துக்கங்கள் நீங்கியும் மறுபடியும் எழும் காலத்தில் உண்டாகின்ற தாயிருத்தலின், சுழுத்தியில் வாசனை வடிவா

மாகத் துக்கம் நிற்பதாகின்றது. ஆதலால் அதன் நீக்கத்தின் பொருட்டு "முற்றும்" என்று சொல்லப்பட்டது.

வினா: சரீரத்தைக் கொள்ளுதலின் நீக்கம் எப்போதுண்டாகும்?

விடை: முற்றும் கர்மம் ஒழிந்த போது.

வினா: கர்ம ஒழிவு எப்போதுண்டாகும்?

விடை: முற்றும் இராகாதி (அஃதாவது ஆசையாதி) ஒழிந்தபோது.

வினா: இராகாதிகளின் ஒழிவு எப்போதுண்டாகும்?

விடை: முற்றும் அபிமானம் ஒழிந்தபோது.

வினா: அபிமானம் எப்போது ஒழியும்?

விடை: முற்றும் அவிவேகம் ஒழிந்தபோது.

வினா: அவிவேகம் எப்போது ஒழியும்?

விடை: முற்றும் அஞ்ஞானம் ஒழிந்தபோது.

வினா: முற்றும் அஞ்ஞானம் எப்போது ஒழியும்?

விடை: பிரஹ்ம ஆத்ம ஐக்கியம் திட அபரோக்ஷமாக அறியப்படுவதாகிய, திட அபரோக்ஷ, சாக்ஷாத்கார ஞானம் உண்டாகும்போது அஞ்ஞானம் முற்றும் ஒழியும்.

வினா: நித்திய கர்மங்கள் வேதத்தால் விதிக்கப் பட்டன வாயிருத்தலின் நித்தியகர்மங் களாலேயே அஞ்ஞான நிவிர்த்தி யுண்டாகு மல்லவா? ஞானத்தினால் நீங்கும் என்று சொல்வது என்னை எனின்?

விடை: கர்மாதிகளால் அஞ்ஞானம் நீங்காது; அஃது எதனாலெனின்: அஞ்ஞானமும் கர்ம மும் தம்முள் விரோதியாகாது; ஆதலினா லாம். கர்மம் ஞானம் இரண்டிற்கும் விரோ தம் உண்டாகின்றது; ஆதலால் ஞானத்தினா லேயே அஞ்ஞானம் நிவிர்த்தியாம்.

வினா: அந்த ஞானம் எதனால் உண்டாம்?

விடை: விசாரத்தினாலேயே உண்டாகும்; அதாவது ஆத்ம அநாத்ம விவேக விஷய விசாரத்தி னால் உண்டாகும்.

வினா: அந்த விசாரத்தில் எவன் அதிகாரி?

விடை: சாதன சதுட்டய சம்பன்னன் அதிகாரி. சாதன சதுட்டயம் (சாதனம் நான்கு) ஆவன:—

1. நித்தியா நித்திய வஸ்து விவேகம்.

2. இக அமுத்திர (இகலோக பரலோக) அர்த்த பல போகவிராகம் (பொருட்பயன் நுகர்ச்சி இச்சையின்மை).

3. சம ஆதி ஷட்க சம்பத்தி.

4. முமுக்ஷுத்துவம் என்பனவாம்.

இது சாதன சதுஷ்டய சம்பத்தி (சாதனம் நான்கின் அடைவு).

இதனையுடையவன் சாதனசதுஷ்டய சம்பன்னன்; அவனுக்கு ஆத்ம அநாத்ம விசாரத்தில் அதிகாரமாம் (அதாவது உரிமையாம்). பிரஹ்மசாரிகளுக்கு வேத அத்தியயனத்தினும் வேறு கர்த்தவ்வியம் (அதாவது செய்யத்தக்கது) இல்லாததுபோல, இந்தச் சாதன சதுட்டய சம்பன்னனாகிய ஆத்ம அநாத்ம விசார அதிகாரமுடைய அதிகாரிக்கு, ஆத்ம அநாத்ம விசாரத்தினும் (அதாவது வேதாந்த சிரவண, மனன, நிதித்தியாசன, தத்துவம்பதார்த்த விசாரத்தினும்) வேறு கர்த்தவ்வியம் (செய்யத்தக்கது) இல்லை. (இவனுக்கு ஆத்ம அநாத்ம விசாரத்தினால் ஞானபூர்வக மோக்ஷமாகிய பூரண பலன் உண்டாம். ஆகவே இவன் பூரணபலனுக்கு உரியவனான அதிகாரியாம்).

சாதன சதுஷ்டய சம்பத்தியில்லாத போதும், கிருகஸ்தர்கள் (இல்லறத்தோர்) வேதாந்த சாஸ்திர விசாரம் செய்யின், அதனால் பிரத்தியவாயம் (குற்றமாகிய பாடம்) ஒன்றும் இல்லை. ஆனால் மிக்கசிரேயசு (மிகமேலான நன்மையே) உண்டாகும். அது "நாள் தோறும் பக்தியோடு கூடியதும், குருபணி விடையால் அடையப்படுவதும் ஆன வேதாந்த விசாரத்தினால் நாள் ஒன்றிற்கு எண்பது *கிருச்சிர விரதபலன் உண்டாம்" என்று சுருதியில் சொல்லப்பட்டிருக்கின்றது.

*கிருச்சிர விரதம்—(மனம் பொறிவழி போகாது நிற்றலாகிய தவமுறும் பொருட்டுத் தேகம் இளைக்கத்தக்க உண்டி

4. [சமய தெய்வ வேற்றுமைகளில் ஒற்றுமைச் சமரசம் கூறும் "ஆழ்வார்களும் நாயன்மார்களும்" என்னும் நூலுக்கு—காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகளும், காஞ்சி பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராசாரிய சுவாமிகளும் வழங்கிய மதிப்புரைகளில் உள்ள சமய தெய்வ சமரசத்தை அறிவிக்கும் பகுதிகள்]

காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் வழங்கியது.

சைவ வைணவ சமரசத்திற்கு ஒரு சாதனமாகத் திருப்பாவை திருவெம்பாவை சதஸ்களும் மகா நாடுகளும் ஒவ்வொரு வருஷத்திலும் வெகு விமரிசையாகப் பல இடங்களில் கொண்டாடப்பட்டு, மக்கள் மனதில் சமயபக்தியையும், நல்லுறவையும் வளர்த்துவருவது பிரசித்தம். இந்த முயற்சிக்கு மேலும் உதவி செய்யும் முறையில் மனதில் நன்றுகப்பதியும் வகையில் பல்வேறு காலத்தில் அருளிச் செய்யப்பட்ட

சுருக்குதலாகிய விரதம்) இவ்விரதம் ஆறுநாள் பஞ்சாமிர்தம் மாத்திரம் உண்டு ஏழாம் நாள் உணவில்லாமல் உபவாசமிருந்து இறைவனைச் சிந்தித்திருப்பது.

கிருச்சிர சாந்திராயண விரதம் — பௌர்ணமி தொடங்கி அமாவாசை வரைக்கும் ஒவ்வொரு பிடி அன்னம் குறைத்தும் அமாவாசை தொடங்கி ஒவ்வொரு பிடி அன்னம் அதிகமாகப் புசித்தும் அனுஷ்டித்து இறைவனைச் சிந்திக்கும் ஓர் விசேஷ விரதம், இவ்விரதம் சந்திரகலைகளின் குறைவையும் நிறைவையும் அனுசரித்த தாகலின் சாந்திராயணம் என்னும் பெயருடையதாயிற்று.

தாக இருந்தாலும், ஒத்த கருத்துக்கள் ஏறத்தாழ ஒரே
வாக்கியங்கள் அமைந்துள்ள ஆழ்வார்களின் பாசுரங்
களையும், சைவசமயாசாரியர்களின் தேவாரங்களையும்
பக்திசிரத்தையுடன் தொகுத்துச் சைவவைணவ
சமரசப் பாடல்களையும் தொகுத்துள்ள இந்நூல் வெளி
யீட்டினால் மாணவ மாணவியர் உள்ளத்தில் சகோதர
பாவம்வளர்வதாகுக. அன்பர்கள் இவ்வுயர்ந்த நூலைப்
படித்துசமரசமனப்பான்மையை வளர்த்துக் கொண்டு
பரம்பொருளை வழிபட்டுப் பயனடைவார்களாகுக.

நாராயணஸ்மிருதி

காஞ்சி பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்க
ராசார்ய சுவாமிகள் வழங்கியது.

புண்ணியங்களைத் திரட்டும் வழி
தேடுதலும் பாவங்களைப் போக்கும் வழிதேடுத
லும் ஆகிய இவை இரண்டுமே, மண்ணுலகில்
பிறவி யெய்தும் மக்களுக்கு உரியன. நல்வினை தீவினை
களை இல்லை செய்யும் நாத்திகர் வகுப்பிலே நாம் பிறந்
திலோம். பரம் பொருளான கடவுளைக் காதலித்து
வழிபட்டு உய்யும் வழியை நாடும் நல்லோர் திரளிலே
பிறவி பெறும் அத்தனை புண்ணியம் யாமுடையோம்.
கடவுளின் வழிபாடுகள் பலதிறத்தன. கோவில்களிற்
சென்று சாந்தோடு (சந்தனத்தோடு) விளக்கம், தூய
தூபம் நன்னறு மலர்கள் தூவி ஏத்துதல் முதலிய பல
பல வழிபாடு முறைகள் உள்ளன. இவற்றுள் பக்திப்
பெருங்காதல் பேசுவிக்கப் பேசின முன்னோர்களின்
பாடல்களை வாயினாற்பாடி மனத்தினால் சிந்திப்பது மிகச்
சிறந்த வழிபாட்டு முறையாம்.

"வணங்குத் துறைகள் பலபல வாக்கி மதிவி கற்பால்
பிணங்கும் சமயம் பலபலவாக்கி அவையவை தோறும்
அணங்கும் பலபல வாக்கி நின்மூர்த்தி பரப்பி வைத்
தாய்"

என்ற நம்மாழ்வார் பாசுரத்தின்படி நோக்குமவர்க்கு எந்தச்சமயத்திலும் எந்தெந்தத் தெய்வத்தினிடத்திலும் பகைமை தோன்றக் காரணமில்லை.

"தொக்கிலங்கி யாறெல்லாம் பரந்தோடித் தொடுகலே
புக்கின்றிப் புறம் நிற்க மாட்டாத"

என்ற குலசேகராழ்வார் பாடலின்படி சகல நதிகளும் கடலிற் சென்று சேர்வது போல சகல வழிபாடுகளும் பரந்தாமனிடத்தே சென்று சேரும் என்பதில் ஐயமில்லை. பகவற்கீதையின் முழுநோக்கான பொருளைத் திருவாய்மொழியில் நம்மாழ்வார்;

"இறுக்கு மிறையிறுத் துண்ண எவ்வுலகுக்கும் தன்மூர்த்தி, நிறுத்தினுன் தெய்வங்களாக அத்தெய்வ நாயகன் தானே"

என்கிற பாசுரத்தில் பொறித்தருளினர். வைணவர் சைவ நூல்களைக்காணவும், சைவர் வைணவ நூல்களைக்காணவும் வெறுப்புக் கொள்வது பேதைமை (அறியாமை) யாகும். ஆழ்வார்களின் திவ்யப்பிரபந்தப் பாசுரங்களையும், நாயன்மார்களின் தேவாரத் திரு முறைகளையும் சமரச மனப்பான்மையுடன் ஒருங்கே அனுபவிக்கு மவர்கள் பெரும் பாக்கியம் பெற்றவர்கள். பெருந்தவம்புரிந்தவர்கள் என்னத் தட்டில்லை. அவரவர்கள் தத்தம் தெய்வத்தினிடத்து வைத்துள்ள பக்திப் பெருங்காதலுக்கு இதனுல் எவ்விதமான இடையூறும் நேராது.

வழிபாடும் தெய்வமும் வேருயினும், வழிபாட்டின் வகைகளும் துதி மொழிகளின் தூய நெறியும் பெரும் பாலும் ஒத்திருக்குமாற்றைக்கண்டு உள்ளம் குழையப் பெறுவது தனிப்பட்ட பாக்கியமே யாகும்.

சமரச மனப்பான்மை சகமெங்கும் பரவவேண்டும்.

இங்ஙனம்,

ஸ்ரீ காஞ்சி P. B. அண்ணங்கராசாரிய ஸ்வாமிகள்.

**5. [சமய, தெய்வ வேற்றுமைகளில் ஒற்றுமைச்சமரசம் கூறும் "இந்துமத இணைப்புவிளக்கம்" என்னும் நூலுக்கு காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீசந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள் வழங்கிய மதிப்புரைப் பகுதி]**

சமயங்கள் மாந்தர்கள் வாழ்வாங்கு வாழ்ந்து மேல் நெறி அடைவதற்கான மார்க்கங்களைப் போதிப் பனவாகும். இந்து மதத்தின் சமய வாழ்க்கை தெய் வீக நெறியுடன் இணைப்புண்டிருக்கின்றது. சமயத் துறையிலும், தெய்வீக நெறியிலும் தாம் பின்பற்றுவதே உய்யும் நெறியை அளிப்பதாகும் என்ற எண்ணமின்றி, பிறசமயங்களிடத்தும் பேதம் பாராட்டாமல் தந்தம் நெறியில் நின்று, சமயவாழ்வினையும், பக்தி நெறியினை யும் ஒவ்வொருவரும் கைக்கொண்டு ஒழுகவேண்டும். இதனைக் கைக்கொண்டால் சமயப் போர், மூர்த்தி தூஷணை முதலியன தோன்றமாட்டா.

தமிழ் நாட்டின் சமயவாழ்க்கையில் சைவமும் வைஷ்ணவமும் இரு கண்களாகத் திகழ்ந்துவருகின்

றன. சிவபெருமானும்,விஷ்ணுவும் முறையே இதற்குத் தெய்வங்கள். தேவாரத்தில் சிவனை விஷ்ணுவாக வும், பிரபந்தத்தில் விஷ்ணுவைச் சிவனுகவும் பாவித் துப் பாடிய பகுதிகள் உள்ளன. சிவனை "அலைகடல் நடு அறிதுயிலமர் அரியுரு இயல்பான்" என்று சம்பந் தரும், "அரி அவன்காண்" என்று அப்பரும், விஷ் ணுவை "முக்கண் அப்பா!" என்று நம்மாழ்வாரும் போற்றியுள்ளனர்.

ஒருவருடைய திருமேனியில் மற்றெருவர் இருப்ப தாகவும் கூறப்பட்டுள்ளது. சிவனது இடப்பாகம் விஷ்ணு இடங்கொண்டிருப்பதாகத் தேவாரத்திலும், விஷ்ணுவின் வலப்பாகத்தில் சிவன் விற்றிருப்பதாகப் பிரபந்தத்திலும் பாடப்பட்டுள்ளது. "நாரணனை இடப்பாகத்துஅடைந்தார் போலும்"என்பது தேவாரம். "பிறைதங்குசடையானை வலத்தே வைத்து" என்பது பிரபந்தம். கம்பர், மலையில் உற்பத்தியான வெள்ளம் பல பிரிவுகளாகப் பிரிந்து கடலைச் சென்றடைந்தது; எனக் கூறும் பொழுது அங்கு, சமய தெய்வீக ஒற்று மைக்கு அடிகோலுகிருர் "பரம்பொருள் ஆதியில் ஒன்ருயிருந்ததைப் போல் மலையில் ஒன்ருக ஓடி, பின்னர் அப் பரம்பொருள் சமயவாதிகளிடையே ஆராய்ச்சி முறையில் பல பிரிவுகளாகப் பிரிந்து பல மூர்த்திகளாகியது போலப் பல பிரிவுகளாகப் பிரிந்து சென்று கடலையடைந்தது" என்பது கம்பர் கவியின் சாராம்சமாகும்.

ஆதியில் இருந்தது ஒன்றே ; காரிய காரணத்தை முன்னிட்டு மூன்ருகப் பிரிந்தது. அப்பர் "ஒருருவே மூவுருவமான நாளோ" என்ப்பாடுகின்ருர்.

திருமங்கை மன்னன் இதனை இன்னும் சிறிது விளக்கமாகக் கூறுகின்றார். ஒன்றாயிருந்த அப்பரம் பொருளை வேறுபடுத்திக் கூறும் பொழுது, ஒன்று பொன்னுருவம் (பிரம்மா);ஒன்று கடலுருவம்(விஷ்ணு) ஒன்று தீயுருவம் (சிவன்); என்று ஐக்கியப்படுத்திக் கூறுகின்றார். ஆகவே மக்கள் சமய பேதம், மூர்த்தி பேதம் பாராட்டாமல் சமய பக்தியும் தெய்வ பக்தியும் உடையவர்களாக வாழ்ந்துவர வேண்டும்.

### 6. [காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளின் அருள் மொழிகள்]

### அரியும் சிவனும் ஒண்ணு

புராணங்களைப் பார்த்தால் சிவனிடம் விஷ்ணு தோற்றுப் போனதாகச் சில இடங்களில் இருக்கிறது. சிவன் விஷ்ணுவிடம் தோற்றுப் போனதாகவும் வரலாறுகள் இருக்கின்றன, சிவன் விஷ்ணுவைப் பூஜித்தார் என்று ஓர் இடத்தில் பார்க்கிறோம். சிவனை விஷ்ணு பூஜித்தார் என்று இன்னோர் இடத்தில் காண்கிறோம். சிவனின் அடியைக் காண முடியாமல் விஷ்ணு தோற்றுப் போனார் என்பது திருவண்ணாமலை ஐதிஹ்யம். விஷ்ணு சிவன் இவர்களில் யார் பலசாலி என்பதற்காக தேவர்கள் வைத்த போட்டியில் சிவன் விஷ்ணுவிடம் தோற்றுப் போனார், அப்போது ஸ்தம்பித்துப் போன சிவதநுசுதான் ஜனகரிடம் வந்து பிறகு அதை ராமர் முறித்துப் போட்டார் என்று ராமாயணத்திலிருந்து தெரிகிறது. சிவனை விஷ்ணு பூஜிக்கையில் ஒரு பூ குறைய உடனே தம் கண்ணையே ஒரு

கமலமாகக் கருதிப்பறித்தெடுத்து அர்ச்சித்தார் என்று திருவீழிமிழலை புராணம் சொல்கிறது. இங்கே சிவனுக்கு நேத்ரார்ப்பணேசுவரர் என்றே பெயர். சிவனுக்கு பிரம்மாவின் தலையைக் கிள்ளியதால் பிரம்மஹத்தி தோஷம் ஏற்பட அதைப் போக்கிக் கொள்ள விஷ்ணுவை அவர் பூஜை செய்து, விஷ்ணுவின் அநுக்கிரகத்தால் தோஷத்தைப் போக்கிக் கொண்டார்; என்று திருக்கண்டியூரில் ஐதிஹ்யம் இருக்கிறது. இங்கே பெருமாளுக்கு ஹரசாப விமோசகர் என்றே பெயர். இப்படி ஏகப் பட்ட கதைகள் சிவ உத்கர்ஷத்தையும், விஷ்ணு உத்கர்ஷத்தையும் காட்டச் சொல்லலாம்.

'ஒரே ஸ்வாமி தன்னுடனேயே சண்டை போட்டுக் கொள்ள முடியுமா? தன்னையே பூஜித்துக் கொள்ள முடியுமா?' என்று கேட்பீர்கள். உங்களுக்குச் சமாதானம் சொல்கிறேன்.

மேலே ராமன் முறித்த சிவதநுசைப் பற்றிச் சொன்னேன் அல்லவா? இந்தக் கதையை ராமனுக்கே சொன்னவர் பரசுராமர்தான். சீதா கல்யாணம் முடிந்து எல்லோரும் அயோத்திக்குத் திரும்பும்போது ராமரைப் பரசுராமர் வழிமறிக்கிறார். "சிவவிஷ்ணு யுத்தத்தில் 'மக்கார்' செய்த ருத்ரதநுசை உடைத்துப் பெரிய பேர் வாங்கி விட்டாயேடா! இதோ விஷ்ணுவின் வில் என்னிடம் இருக்கிறது. இதை நாணேற்றிப் பார்,, என்று ராமனிடம் சண்டைக்கு வருகிறார் பரசுராமர்.

இந்தப் பரசுராமர் யார்? விஷ்ணுவின் அவதாரம், இவர் சண்டைக்கு அழைத்த ராமர் யார்? அவரும்

அதே விஷ்ணுவின் அவதாரம்தான். ஒரே விஷ்ணு வின் அவதாரங்கள் இங்கே சண்டை போட்டுக் கொள்ள வில்லையா? இதில் ஓர் அவதாரம் (பரசுராமர்) இன்னோர் அவதாரத்திடம் (ராமர் இடம்) தோற்றுப் போகிறது. சிவனை ஜயித்த விஷ்ணுவின் வில்லை நாணேற்றி, அதே விஷ்ணுவின் அவதாரமான பரசு ராமரை ஓட்டிய இன்னோர் அவதாரமான ராமச்சந்திர மூர்த்தி பிறகு இதே சிவனுக்கு லிங்கம் வைத்துப் பூஜை செய்து ராமேசுவரத்தை உண்டாக்கியிருக் கிறார்.

ஜனங்களுக்குப் பக்தி உண்டாக்க வேண்டு மானால் அதற்கும் பகவானே வழிகாட்டுகிறார். எப்படி? தாமே பக்தனாக இருந்து வழிகாட்டுகிறார். இதற்காகத் தான் சிவன், பக்தராக இருந்து விஷ்ணுவைப் பூஜிக் கிறார். விஷ்ணு, பக்தனாக இருந்து சிவனைப் பூஜிக் கிறார்.

இரண்டும் ஒன்றுதான். ஹரன்—ஹரி என்ற பெயர்களே ஒன்றாகத்தான் இருக்கின்றன. இரண்டும் சேர்ந்தே ஹரிஹரன், சங்கர நாராயணன் என்றெல் லாம் சமரச பாவத்தை வளர்க்கிற மூர்த்திகளாக இருக்கின்றன. ஆழ்வார்கள் பெருமாளையே ஹரி ஹரனாகத்தான் கண்டார்கள்.

தாழ்சடையும்-நீண்முடியும்; ஒண்மழுவும்-சக்கரமும்;
சூழ்அரவும்-பொன் நாணும் தோன்றுமால்-சூழும்
திரண்டருவி பாயும் திருமலை மேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து.

என்று முதலில் சிவ அம்சங்களையும் பிறகு விஷ்ணு அம்சங்களையும் சொல்லி வேங்கடராமனைப் பாடுகிறார் பேயாழ்வார். 'வெவ்வேறு உருவம் இருந்தாலும் ஒருவன் இன்னொருத்தனில் இருக்கிறான்' என்று சொல்லி, இங்கும் முதலில் சிவனையே பாடுகிறார் பொய்கை ஆழ்வார்.

பொன் திகழுமேனிப் புரிசடையம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும்-என்றும்
இருவரங்கத்தால் திரிவரேனும் ஒருவன்
ஒருவன் அங்கத்தென்றும் உளன்.

பெரிய கவி கம்பனோ, "அரன் அதிகன் உலகளந்த அரி அதிகன் என்றுரைக்கும் அறிவிலோர்க்குப் பரகதி சென்று அடைவது அரிய பரிசு" என்று சொல்லி விட்டார்.

மகா பெரியவர்கள் சொன்னது இருக்கட்டும். சின்னக் குழந்தை கூட, 'அரியும் சிவனும் ஒண்ணு; அறியாதவன் வாயில் மண்ணு' என்கிறது. இந்தக் குழந்தை வாக்கு ஆயிரம் பதினாயிரம் வருஷமாக இருந்து வந்திருக்கிறது. குடிசை போட்டால் ஓரிரண்டு வருஷத்தில் பாழாகிறது. செங்கல் வீடானால் நூறு வருஷம் இருக்கிறது. பாறுங்கல்லில் கட்டினால் ஆயிரம் வருஷம் நிற்கிறது. அப்படியே உள் பலம் இல்லாத வார்த்தைகளும் கால வெள்ளத்தில் அடிபட்டுப் போகின்றன. ஆனால் இந்தக் குழந்தைச் சொல் காலத்தைக் கடந்து நிற்கிறது. இதில் இருக்கிற சாரத்தினால் தான். தத்துவத்தால்தான் நிற்கிறது.

## ஒற்றுமை உணர்த்தும் உத்தமத் தலங்கள்

சிவ - விஷ்ணு அபேதத்தைக் காட்டும் ஸ்தலங்கள் பல உள்ளன. திருநெல்வேலிச் சீமையில் சங்கர நாராயணன் கோயிலும், மேற்கே ஹரிஹர க்ஷேத்திரத்திலும் இரண்டு மூர்த்திகளும் இணைந்த பிம்பங்கள் உள்ளன. குற்றுலத்தில் விஷ்ணு மூர்த்தியையே அகஸ்திய மகரிஷி சிவலிங்கமாக மாற்றியிருக்கிருர். இவை பிரபலமான ஸ்தலங்கள். இவ்வளவு பிரபலமில்லாத ஒரு க்ஷேத்திரத்தைப் பற்றிச் சொல்கிறேன். திருப்பாற் கடல் என்று ஓர் ஊர் இருக்கிறது. காஞ்சீபுரத்திலிருந்து வேலூருக்குப் போகிற வழியில் இருபது மைலில் இருக்கிறது. முதலில் அந்த க்ஷேத்திரத்தில் ஒரு பெருமாள் கோயில்கூடக் கிடையாதாம். ஈசுவரன் கோயில்தான் இருந்ததாம். ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் அநேக க்ஷேத்திரங்களுக்குச் சென்று விஷ்ணு தரிசனம் பண்ணிக் கொண்டு வருகிற காலத்தில் அந்த ஊருக்கும் வந்தாராம். ஒவ்வொரு நாளும் ஓர் ஊருக்குப் போகிற போது விஷ்ணு தரிசனம் பண்ணுமல் அவர் ஆகாரம் பண்ணுவதே இல்லை.

அவர் திருப்பாற்கடலுக்கு வந்து, "எங்கே விஷ்ணு ஆலயம் இருக்கிறது?" என்று ஒவ்வொரு கோயிலாகப் போனுர். எல்லாம் சிவன் கோயிலாகவே இருந்தன. விஷ்ணு ஆலயமாகத்தான் இருக்கும் என்று ஒரு கோயிலுக்குள் நுழைந்தார். உள்ளே போனுல் ஈசுவரன் இருந்தார்; உடனே வெளியே ஓடி வந்து விட்டார். ஆகாரம் பண்ணவில்லை. 'இன்றைக்கு விஷ்ணு தரிசனம் கிடைக்கவில்லையே!' என்று துடி துடித்துக் கொண்டிருக்கிருர். அவர் மனசு பக்தியினுலே பட்ட பாடு சகிக்கவில்லை. அப்போது ஒரு கிழவர்

அவருக்கு முன்னால் வந்து, "என்ன ஸ்வாமி! விஷ்ணு தரிசனம் பண்ண வருகிறீர்களா?'' என்று கேட்டார்.

"இந்த ஊரிலே எங்கே ஐயா விஷ்ணு கோயில் இருக்கிறது?" என்று அவர் கோபமாகச் சொன்னாராம்.

"அதோ தெரிகிறதே அது சாக்ஷாத் பெருமாள் கோயில்தான்" என்று அவர் சொன்னாராம்.

அந்தக் கோயிலுக்குள் தான் அவர் நுழைந்து போய், ஈசுவரன் இருப்பதைப் பார்த்து விட்டு ஓடி வந்தார். அதனால்,"ஏன் ஐயா பொய் சொல்கிறீர்? அது ஈசுவரன் கோயில்" என்று சொன்னாராம்.

"இல்லவே இல்லை நீர் தான் பொய் சொல்கிறீர். அது பெருமாள் கோயில் தான். வேண்டுமானால் உள்ளே வந்து பாரும்" என்று அவர் பேச, 'இப்போது தான் நான் பார்த்தேன்' என்று இவர் சொல்ல, கடைசியில் கிழவர், 'பந்தயம் கட்டும்; எதற்காகப் பொய் சொல்கிறீர்?' என்று கையைப் பிடித்துக் கொண்டு சண்டைக்குப் போய்விட்டாராம்.

அதற்குள் ஊரில் இருந்தவர்களுக்கு இது தெரிந்து அவர்களுக்குள் மத்தியஸ்தம் செய்து வைக்க வந்தார்களாம்.

"எதற்காக இப்படிச் சண்டை போட்டுக் கொண்டிருக்க வேண்டும்? எல்லோரும் தான் போய் அதைப் பார்க்கலாமே?" என்று சொன்னார்கள்.

"நான் அந்தக் கோயிலுக்குள் நுழைய மாட்டேன்" என்று விஷ்ணு பக்தர் சொன்னாராம்.

"வராவிட்டால் விட முடியாது. எப்படி நான் சொல்லுவது பொய் என்று இவர் பார்க்காமல் சொல்ல

லாம்? யார் பொய் என்று பார்த்து விட வேண்டும்" என்று அந்தக்கிழவர் விட மாட்டேன் என்றாராம்.

கடைசியில் ஊரார் மத்தியஸ்தத்தின் பேரில் இவர்கள் எல்லோரும் கோயிலுக்குள் சென்றார்கள். வாஸ்தவத்தில் அங்கே போய்ப் பார்த்தால் சிவலிங்கம் மாதிரி இருந்தது; கீழே பிரம்ம பீடமாகிய ஆவுடையார் இருந்தது. அதன் மேல் லிங்கத்தின் ஸ்தானத்தில் பெருமாள் நின்று கொண்டிருந்தார். அதைப் பார்த்தவுடன், 'அடடா! நாம் ஏமாந்து போய் விட்டோமே. மகாவிஷ்ணு அல்லவா இங்கே இருக்கிறார்?' என்று அந்த விஷ்ணு பக்தர் மிகவும் மனம் உருகி அநேக ஸ்தோத்திரங்கள் பண்ணினாராம். கிழவரிடம் மன்னிப்புக் கேட்கத் திரும்பினால்; அந்தக் கிழவரே விஷ்ணு மூர்த்திக்குள் கலந்து விட்டார். பெருமாளே கிழமாய் வந்திருக்கிறார்.

திருப்பாற்கடல் என்னும் ஊருக்குப் போனால் இப்போதும் பார்க்கலாம். ஆவுடையார் இருக்கும்; அதற்கு மேல் லிங்கம் இருக்கிற இடத்தில் பெருமாள் நின்று கொண்டிருக்கிறார். இந்த க்ஷேத்திரமும் நமக்கு ஈசுவரன் வேறு; மகாவிஷ்ணு வேறு என்று இல்லை என்கிற தத்துவத்தை விளக்குகிறது.

**[ஆறு சமயங்களும் அத்வைதப்பிரம்மமாகிய ஒரு மரத்தின் ஆறு கிளைகளாக உள்ளன என, வேற்றுமையில் ஒற்றுமையை அறிவிக்கும், அத்வைதப் பிரம்மமர உருவகம்]**

நிர்க்குணம் வேர். சகுணகாரணம் அடிமரம். சகுணகாரியங்களாகிய சைவம், வைஷ்ணவம், காணாபத்தியம், கௌமாரம், சாக்தம், சௌரம் என்னும் ஆறு சமயங்கள் ஆறு கிளைகள். இந்த ஆறு சமயங்களும்

ஸ்ரீ சங்கர பகவத்பாத ஆசாரிய சுவாமிகளால் புடம் போட்ட பொன் போல் ஆயின. ஆகவே அவர் ஷண் மத ஸ்தாபனசாரியார் என்னும் திரு நாமம் பெற்ருர்.

### அத்வைத முக்திச் சிறப்புப் பிரசாரம்

அத்வைத முக்தியைக் குறித்த வெளிப் பிரசாரத் தைக் காட்டிலும், நம்மை நாம் அத்வைத முக்திக்குரிய சீர்திருத்தம் செய்து கொண்டால், அதனினும் சிறந்த பிரசாரமாய்விடும். மரத்தில் புஷ்பம் புஷ்பித்தால் தேன்வண்டுகளை அழைக்காமலே வந்து தேன் உண் ணும். பழங்கள் பழுத்தால் பக்ஷிகளை அழைக்காமலே வந்து பழங்களை உண்ணும். அதுபோல எல்லா நாட் டினரையும் அழைக்காமலே வந்து அத்வைத முக்தி யை விரும்பிக் கேட்டு அறிந்தடைந்து கொண்டிருக் கின்றனர்.

## 7. [சமய தெய்வ வேற்றுமைகளில் ஒற்றுமைச் சமரசங் கூறும் அவிரோதவுந்தியார்]

ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகள் அருளிய அவிரோத வுந்தியார்— ஸ்ரீ சிதம்பரசுவாமிகள் உரை

வேதம்பல் பக்குவம் ஓர்ந்தொரு வீட்டினுக்கு<br>ஓதும்பல் லாற்ருனும் உந்தீ பற<br>உண்மை கண்டார்க்குஏகம் உந்தீ பற.

(இதன் பொருள்) ஒப்பற்ற வீட்டிற்கு மார்க்கம் ஒரு விதம் அன்றிப் பலவிதமாக வேதம் கூறுவதும் ஆன்மாக்களது கன்மத்தளவில் உண்டாகிய பருவ

பேதத்தை ஞானமயனாகிய பகவான் அறிந்து அம் மாக் கங்களினது கருமகாண்டங்களை அங்ஙனங்கூறி ஞான காண்டங்களில் எல்லாம் தற்போத நீக்கமே கூறுதலின் உள்ளபடி தேர்வார்க்கு வெவ்வேறு மார்க்கங்கள் எல் லாம் அபேதமாதலால் சுருதி நெறி ஒன்றே. (என்ற வாறு)

இதற்கு உதாரணம்—திருமந்திரம்

ஒன்றதே பேரூர் வழி ஆ (று) அதற்கு உள (து)
என்றதே போலும் இருமுச் சமயங்கள்
நன் (று) இது தீ(து) இது என்(று) உரை
மாந்தர்கள்
குன்று குரைத்தெழும் நாயை ஒத் தாரே.

முதலொன்றும் ஆனை முதுகுடன் வாலும்
திதமுறு கொம்பு செவிதுதிக் கைகால்
மதியுடன் அந்தகர் வகைவகை பார்த்தே
அதுகூறல் ஒக்கும் ஆறு சமயமே.

அஞ்ஞவதைப்பரணி

தலைபலவாய் பெயர்பலவாம் நதிகள் எல்லாம்
சாகரத்தில் ஒருநீர்ஆம் தன்மை போலப்
பலபலவாய்ச் சொல்லும்நெறி எல்லாம் சொல்லப்
பட்டதொரு பொருளினையாம் பணிதல் செய்வாம்.

அழியாத வீடென்னும் பழைய ஊர்கண் (டு)
அறியாதார் அதுகாண வேண்டி ஆறு
வழியாகும் சமயங்கள் கொண்டுதம்மில்
வழக்குப்பே சும்சழக்கு மாழ்க வன்றே.

பட்டினத்துப்பிள்ளையார்

அன்றென்றும் ஆம் என்றும் ★ ஆறு சமயங்கள்
ஒன்றோ(டு) ஒன்று ஒவ்வா(து) உரைத்தாலும்—
என்றும்
ஒருதனையே நோக்குவார் உள்ளத் (து) இருக்கும்
மருதனையே நோக்க வரும்.

அமுதசாரம்

உரைத்த (து) உரையா (து) உரைக்கும் சமயம்
பரத்தை அறிவுற்ற பான்மை—மரத்தின்
அவயவத்தில் ஓர் ஒன் (று) அறிந்தார் மரமாக
அவயவத்தைக் கொண்ட வா (று) ஆம்.

மேற்படி அவிரோத வுந்தியார் கவியுரைமுடிந்தது.

இவ்வாறு அறிவிற் சிறந்த ஆன்றோர்கள் சமய தெய்வ வேற்றுமைகளில் ஒற்றுமையுள்ளதை அறிவித்துச் சமய தெய்வ ஒற்றுமைச் சமரச நடுநிலைக் கருத்துடன் ஒழுகுவதே இறைவனின் திருவருள் பெறுதற்கு உகந்த நெறியாகும் என்று அறிவித்துள்ளனர்.

இவ்வாறான சமய தெய்வ ஒற்றுமைச் சமரசநடுநிலைக் கருத்துக்கு மாறாகச் சில நூல்களில் புகுத்தப்

---

★ ஆறு சமயங்கள் வருமாறு:—1-கணபதியை வணங்கும் காணபத்தியம். 2-குமரனை வணங்கும் கௌமாரம். 3—சிவனை வணங்கும் சைவம். 4-விஷ்ணுவை வணங்கும் வைஷ்ணவம். 5- சக்தியை வணங்கும் சாக்தம். 6-சூரியனை வணங்கும் சௌரம் என்பனவாம்.

பட்டிருப்பனவான விஷயங்கள் எல்லாம் பிற்காலத்தில் அகங்கார மமகாரதுரபிமான முள்ளவர்களால் இடைச் செருகலாகப் புகுத்தப்பட்டன என்று அறிவிற் சிறந்த ஆன்றோர்கள் நூல்களில் கூறியுள்ளனர். மற்றும் முன் னுக்குப் பின் முரணுகப் பொருள்கள் உள்ளனவற்றைக் கொண்டு நாமும் அறிந்துகொள்ளலாம். ஆகவே அவைகள் அங்கீகரிக்கத்தகாதனவாம்.

மேற்கூறியபடி இடைச்செருகல் எனக் கூறும் நூல்களில் ஒன்று வருமாறு:—

ஸ்ரீ திருமூலர் திருமந்திரம் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீகாசிவாசி அருள் நந்தித் தம்பிரான்சுவாமிகள் அவர்கள் நிறுவிய பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியிலிருந்து ஸ்ரீலஸ்ரீகாசிவாசி சுவாமிகள் அவர்களின் திருவுளப் பாங்கின் வண்ணம் வெளியிடப் பெற்றது. பதிப்பாசிரியர் ஸ்ரீ T. M. குமர குருபரன்பிள்ளை B. A. B. L. மானேஜிங்டிரஸ்டி ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்மடம் ஸ்ரீ வைகுண்டம். சார்வரி ஆண்டு ஆவணிமூலம். 1960.

திருமந்திரவரலாறு திருமூலர்பாடியது மூவாயிரம் பாடல்களே ஆகும். "தந்திரம் ஒன்பது சார்வு மூவா யிரம்" என்று அவரே கூறுவதால் அறியலாம். ஆனுல், தற்காலம் பதிப்பிக்கப்பட்ட சில பிரதிகளில் 3081—பாடல்கள் உள்ளனவே என்ருல், அதிகப் படியாய் உள்ளவை எல்லாம் இடையில் பல புலவர் களால் நுழைக்கப்பட்டவையும், ஒரே பாட்டை இரண்டு மூன்று இடங்களில் திருப்பி அச்சடிக்கப் பட்டவையும் ஆகும்.

திருமூலர் பாடிய பாட்டுக்களில் சில வற்றை எடுத்துவிட்டு, சிலர் புதுப்பாட்டுக்களைப் பாடிச் சேர்த்துள்ளார்கள். இஃது எதனுல் தெரிகிறது என்ருல் உரையாசிரியர்களாலும், பிற்பட்ட நூலாசிரியர் களாலும் எடுத்து ஆளப்பட்ட திருமந்திரப் பாடல்கள் இப்போது சில பிரதிகளில் இல்லாமலிருப்பதுவே சான்ருகும் ; என்பதாம்.

**8. வேதாந்த சிந்தாந்தங் கூறும் அத்வைதமும், ஆகமாந்த சைவ சித்தாந்தங் கூறும் அத்வைதமும் தற் போதம் இழக்கும் முத்தி நிலையில் சமமாகிய ஒன்றேயாகின்றது என்னும் ஆன்ரோர் அறிவுரைகள்**

ஸ்ரீ திருஞான சம்பந்தக் கண்ணுடையவள்ளலார் அருளிய ஒழிவிலொடுக்கம்.

கயிற்றரவும் கட்டையினில் கள்ளனும்போல் மாயா
மயக்கமற்ற வேதாந்த வாழ்வும்—முயற்சி கெட்ட
ஆனந்தா தீதத்தே ஆணவராம் ஆகமமும்
தான்நந்தி ஞர்க்குச் சமம்.

ஸ்ரீ திருஞானசம்பந்தச் சிவஞான வள்ளலார் அருளிய-வள்ளலார் சாத்திரத்தில்-நிராமய அந்தாதி.

வேதாந்தங்கூறும் "அகம்பிரம்மாஸ்மி'' என்னும் மகாவாக்கியத்திற்கு உரிய ஐக்கிய அத்வைதமும், ஆகமாந்த சைவசித்தாந்தங்கூறும் "சிவோகம்'' என்னும் மகாவாக்கியத்திற்கு உரிய ஐக்கிய அத்வைதமும் ஆகிய இரண்டும், தற்போதம் முழுவதும் இறந்த முத்தி நிலையில் ஒன்றே என்று திருஞானசம்பந்த சுவாமிகள் உபதேசித்தார் என்று கூறுகின்ருர்.

உற்றுணரில் நீயே உயர்பிரமம் என்பதுவும்
மற்ற சிவம் தானுய் வகுப்பதுவும்—முற்றும்
இறந்த இடத்(து) இரண்டும் ஏகமே என்ருன்
சிறந்தசீ காழிவரு தே.

காஞ்சி காமகோடி ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் அருளிய-அத்வைத சித்தாந்த வினு விடை.

வினு : சைவமும் அத்வைதமும் ஒன்றே என்பதற்கு ஆதாரம் உண்டா?

விடை : மெய்கண்டாருடைய சீடராகிய சிவஞான வள்ளலார் "வள்ளலார் சாத்திரம்" எழுதியிருக்கின்ருர். அவர் சிறந்த சைவராகக் கொள்ளப்படுவது போலவே, சிறந்த அத்வைதியாகவும் கொள்ளப்படுகிருர்.

வினு : இது எவ்வாறு தெரிகிறது?

விடை : வள்ளலார் சாத்திரம்—கர்நாமிர்தம்

சைவசித் தாந்த மெல்லாம் தான்அவன் ஆகி நிற்றல்
மையறு வேத சித்தம் மற்றது நானே என்னல்
உய்வகைக்(கு) இரண்டும் ஒன்(று) என்(று) ஓதியென் உயிர்க்கு இலாபம்
செய்தசற் குரவன் நீயே திருப்புலி வனத்து ளானே.

என்று குருவைத் துதிக்கின்ருர். இதில் முக்திக்காம் இவ்விரண்டு சித்தாந்தங்களும் ஒன்றே என்று கூறுவதால் சைவ சித்தாந்தமும் அத்வைதமேயாகின்றது என்பது அத்வைத சித்தாந்த வினு விடை கூறுவதாம்.

ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகள் அருளிய அவிரோத வுந்தியார் என்னும் நூலிலும்; இது போன்ற பிற நூல் களிலும் மேற்கூறியபடி வேதாந்த அத்வைதமும், ஆக மாந்த சைவ சித்தாந்தம் முதலியவைகள் கூறும் அத் வைதமும் முத்திநிலையில் ஒன்றே என்று கூறுகின்றன வாம்.

**9-தத்துவமசி மகாவாக்கியம் அறிவிக்கும் ஐக்கிய அத்வைதத்திற்கு உரியதான விட்டுவிடாத இலக்கணை கூறும் திருமந்திரமும், இதர நூல்கள் கூறும் அத்வைத அர்த்தமும்**

திரு மூலர் திருமந்திரம்-2570-தத்துவமசி வாக் கியம்.

ஆகிய அச்சோயம் தேவதத் தன்னிடத்து
ஆகிய விட்டு விடாத இலக்கணைத்து
ஆகுப சாந்தமே தொம்தத் தசியென்ப
ஆகிய சீவன் பரன்சிவன் ஆமே.

சிவஞான வள்ளலார் சாத்திரம்-சுருதிசார விளக் கம்.

அத்துவிதம் துவிதமல்லா தெனவரிய மறையேகம்
அத்துவிதம் இதற்கையம் இலையென்றே
அறைந்தாலும்
பொய்த்துவித மயக்கொழியார் பூருவவா தனையாலே
அத்துவித மொழிப் பொருள்தான் அந்நியமாய்த்
தெளிவரால்,

ஷை சாத்திரம்-சித்தாந்த தரிசனம்

அத்துவிதம் ஒன்றேயாம் ஆங்கிரண்(டு)
இன்மையெனில்
அத்துவிதம் அன்றோ அது.

துவிதம் இரண்(டு) ஆகும்அத் துவிதம் ஒன்(று)
ஆகும்.
துவிதமயல் கெட்டோய் துணி.

அத்து விதத்துக்கு அருத்தம் பலவென்னும்
சிற்றறிவு கொண்டுசில கீழ்.

## 10- உலகத்தில் உள்ள மதங்கள் கூறுகின்ற ஆறு வகைக் கியாதிகள்

கியாதி = உலகத் தோற்றம் கூறுதல்.

1. சத்கியாதி-உலகம்சத்தின் தோற்றம் (சத்காரியம்) எனக் கூறுதல்.
2. அசத்கியாதி-உலகம் அசத்தின் தோற்றம் எனக் கூறுதல்.
3. ஆத்மக்கியாதி-உலகம் புத்தியாகிய ஆத்மாவின் தோற்றம் எனக் கூறுதல்.
4. அந்நியதாக்கியாதி-உலகம் பரமாணுக்களின் அந்நியத் தோற்றம் எனக் கூறுதல்.
5. அக்கியாதி உலகம்மாயாகாரிய மனதின் ஸ்மிருதி என்னும் ஞாபகத்தின் தோற்றம் எனக் கூறுதல்.

6. அநிர்வசனீயக்கியாதி- உலகம் சத்து என்ருவது அசத்து என்ருவது வசனிக்கத் தகாததாய்(சத்துக் கும் அசத்துக்கும் வேருன பாதயோக்கிய சொரூப மாகியமித்தையா சொரூபம் என்று வசனிக்கத் தக்கதாய்) உள்ள கற்பனு சொரூபத் தோற்றம் எனக் கூறுதல்.

இந்தக்கியாதிகளின் விரிவான விளக்கங்களை "விருத்திப் பிரபாகரம்" என்னும் நூலிற் காண்க.

**11- அநிர்வசனீயக்கியாதியுடைய வேதாந்தம் வேறு, அக்கியாதியுடைய மாயாவாத சாங்கியம் வேறு என்று பகுத்து அறிந்து கொள்ளும் பகுத்தறிவின்றி, வேதாந்தத்தை மாயாவாதம் என்று கூறுகின்றவர்கட்குத் திருமூலர் கூறும் பகுத்தறிவு உபதேசமும், குமாரதேவ சுவாமிகள் அமைக்கும் "மருள்விழியர்" என்னும் நாமகரணமும்**

ஸ்ரீ திருமூலர் திருமந்திரம்-2179

ஆகின்ற தொண்ணூறேு(டு) ஆறும் பொது என்பர்,
ஆகின்ற ஆரு(று) அருஞ்சைவர் தத்துவம்,
ஆகின்ற நாலேழ் வேதாந்தி, வயிணவர்க்கு
ஆகின்ற நாலா(று), ஐயைந்து மாயாவாதிக்கே.

(இதன் பொருள்) பொருள்கள் ஆகின்ற தொண்ணூற்ருறு தத்துவங்கள் பலவேறு கொள்கை யினரும் பொதுவாக ஒப்புக் கொள்கின்றனர். முப்பத்தி ஆறு தத்துவங்கள் அரிய சைவர்கள் கொண்ட தத்து

வங்களாம். இருபத் தெட்டுத் தத்துவங்கள் ★வேதாந்தி என்று கூறப்படும் மறைமுடிவினர் கொண்ட தத்துவங்களாம். வைஷ்ணவர்கட்கு அவர்கள் கொண்ட இருபத்து நான்கு தத்துவங்களாம். †மாயாவாதிக்கு (மாயையே உலகிற்கு முதல், ஈசுவரன் இல்லை எனக் கூறும் நிரீசுவரசாங்கிய மதத்தனுகிய மாயாவாதிக்கு) இருபத்தைந்து தத்துவங்களாம்.

★வேதாந்த ஜகத்குரு ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகள் அருளிய தத்துவ போதம், ஸ்ரீ நிஜகுண யோகீசுவரர் கன்னட பாஷையில் இயற்றியும், அதை ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் தமிழ்க்கவிகளாக இயற்றியும் உள்ள வேதாந்த சூடாமணி, ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் இயற்றிய வேதாந்தசார கைவல்லிய நவநீதம் முதலியவை கூறுகின்ற இருபத்தி எட்டுத் தத்துவங்கள் வேதாந்திகள் கொண்ட தத்துவங்களாம்.

†மாயாவாத கபிலர் இயற்றிய சாங்கியமத நூல்கள் கூறுகின்ற இருபத்தைந்து தத்துவங்கள் மாயாவாதிகள் கொண்ட தத்துவங்களாம். இவர் ஈசுவரன் இல்லை என்று கூறுவதால், நிரீசுவரசாங்கியர் என்றும்; மாயையே உண்டு அந்த மாயையே உலக முதற்காரணப் பொருள் என்று கூறுவதால், மாயாவாதி என்றும் கூறப்படுவர். இவர் கொண்ட தத்துவங்கள் 25 ஆம் என்பது-திருக்குறள் நீத்தார் பெருமை "சுவையொளியூ றோசை" என்னும் செய்யுளின் பரிமேலழகர் உரையானும்; ஸ்ரீ வித்தியாரண்ணிய சங்கராசாரியர் இயற்றிய சர்வதரிசன சங்கிரகம் சாங்கிய தரிசனத்தாலும்; பிறவாற்றானும் விளங்குவதாகும்.

ஸ்ரீ குமார தேவ சுவாமிகள் அருளிய, பிரமானுபூதி விளக்கம்.

தெருள்விழியோர் துணிவுஇது எனத் தேர்ந்துஅனுபூ
தியிற் கொள்வர்
மருள் விழியோர் திரிவுஇல் இதை மாயாவா தமது
என்பர்.

குறிப்பு—ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் கொண்ட வேதாந்தக் கொள்கையும், ஸ்ரீ குமார தேவ சுவாமிகள் கொண்ட வீர சைவக் கொள்கையும் அநிர்வசனியக்கியாதியாகிய ஒரே கொள்கையையுடையனவாம்; என்பதறிக.

## மேற்கூறிய மாயாவாத மதத்தின் மாண்பின்மையைக் கூறும் ஆன்றோர் அறிவுரைகள்

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய போற்றித் திருவகவல்.

'மிண்டிய மாயாவாதம் என்னும் சண்டமாருதம்
சுழித்தடித் தார்த்து'

ஸ்ரீ சிவஞான வள்ளலார் சாத்திரம்-சித்தாந்த தரிசனம்.

"மனமே புருடனன்றி மற்றில்லையென் றோதும்
கனமாயா வாதிமதங் காண்"

ஸ்ரீ தத்துவ ராய சுவாமிகள் அருளிய அஞ்ஞவதைப்பரணி கூழ்வார்ப்பு.

"படித்து மறைகள் பொருள்படுத்திப் பயனில்எட்டிப் பாராதே
வடித்த கிளிபோல் வரும்மாயா வாதப்பேய்க்கும் வாரீரே"

**மேற்கூறிய ஈசுவரன இல்லை யென்னும் மாயாவாதியின் சார்புடைய; ஈசுவரன் இல்லை, இறந்து போகும் தேகமாகிய நாமே ஆத்மப்பிரம்மமாகிய கடவுள்; உலக போகமே மோக்ஷம் என்னும், உலகாயத மதத்தின் மாணபின்மையைக் கூறும் ஆன்றோர் அறிவுரைகள்.**

ஸ்ரீ தாயுமான சுவாமிகள் பாடல்-சிற்சுகோதய விலாசம்.

"யாங்களே கடவுள் என்றிடும் பாதகத்தவரும்"

ஸ்ரீ ஜோதி இராமலிங்க சுவாமிகள் திருவருட்பா.

"சாம்பிரமம் ஆம் இவர்கள் தாம்பிரமம் எனும் அறிவு தாம்பு பாம்பெனும் அறிவுகாண்"

(இதன் பொருள்) சாகின்ற உடம்பே பிரம்மமாகிய கடவுளாம் என்ற கொள்கையுடைய உலகாயத மதத்தினராகிய இவர்கள், உடம்பாகியதாம், பிரம்மமாகிய கடவுள் என்னும் அறிவானது கயிற்றைப் பாம்பு என அறியும் விபரீத அறிவு (திரிபு உணர்வு) போன்ற விபரீத அறிவாகும்

## 12. திருவாசகம், அனுபூதி உரை.
## (தஞ்சை மாவட்டம் நன்னிலம் அரசாங்க நூல் நிலையம்-எண்-594.)

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய திருவாசகம்.
சீகாழி-ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் இயற்றிய
அனுபூதி உரை, முதற்பகுதி
பார்வையிட்டோர், உ. வே. சுவாமிநாத ஐயர் அவர்கள்
பதிப்பாசிரியர், ரா. விசுவநாத ஐயர் அவர்கள்.

(ஓர் பகுதி)

"நமச்சிவாய வாழ்க=(கருத்துரை) பரமசிவனை நோக்கி-ஐவகைப் பொருளாய தேவரீர்! அடியேனிடத்து அபேதமாகத் தானாய் நிற்கும் முறைமை பிரியாதிருக்க அருள்க." (என்பதாம்)

(பக்கம் 41) பஞ்சாக்கரத்துள் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளும் அடங்குகின்றன.

அடங்குதலாவன—(திருவருட்பயன், 9. 2)

இறை சத்தி பாசம் எழின்மாயை யாவும்
உறநிற்கும் ஓங்காரத்துள்.

முப்பொருள் ஒன்ருமோ எனில்? ஒன்ருகாவிட்டால் பரமசிவனுக்குச் சாட்குண்ணியம் (அறுவகைக்கல்யாண குணங்கள்) இல்லை; மூன்றும் ஒரு பொருளாய் இருந்தாலல்லது பரமுத்தி கூடாது. பரமுத்தியிற் கண்டது ஒன்றே; வேறு இன்று. ஆகையால் அப்பொருளும் ஒன்றே; அதுவே வேதாந்தப் பரப்பிரம்ம வத்து. அது புலப்படாவிட்டால் இலாபம் இல்லை.

அது புலப்படுவது எப்படி என்னில்?

திருநாமமான பஞ்சாக்கரம் பரமசிவனுக்குச் சதா நடனத் திருமேனியானதால் அந்தத் தகரவித்யா (இருதயாகாசத் தொளிரும் ஆத்மவித்யா) மந்திர சொரூபமாயிருக்கும் பரம ரகசியப் பொருளானது ஞான குரு உபதேசத்தால் அனுபூதி பெற்றால் புலப்படும் என்று உணர்க.

பரமுத்தியிலுள்ள நிட்டை ஒன்றுமே பஞ்சாக்கர நடனம் என்று அறிக.

இப்போது அருளிய சம்பிரதாய நிட்டைக்கு உதாரணம்.

**திருஞானசம்பந்தக் கண்ணுடைய வள்ளலார் அருளிய "சிவானந்த மாலை" கவி-329-பஞ்சாக்கரதரிசன முடிவில் ஞானமகடூஉ முன்னிலையில் வைத்துக் கூறியது:**

"நாவார அஞ்செழுத்தை ஓதினர்க்கு என்றுரைத்தீர்
ஓவாத முத்தரெலாம் ஓதுவ(து) என்?—பாவாய்கேள்
சொல்லிறந்த அஞ்செழுத்தை சொல்லிறந்த
வுண்மையிலே
சொல்லிறந்து நின்(று) ஓது வார்."

என்பதும்; இது போன்ற பிறவும் ஆம்.

### 13. ஸ்ரீ குமாரதேவ சுவாமிகள் பிரமானுபூதி விளக்கம்

1. பிரமானு பூதியினைப் பெரியநா யகியெனக்குத்
திரமாக அருளியவா செப்புவேன் அவளருளால்

2. அவளருளி ஞலே அனுபூதி யின்விளக்கம்
இவனுரைக்கேன் அந்நிலையை எய்திநே
ரேகளிக்க.

3. தனைத்தவிர வேயொன்றைத் தான்வேருய்க்
கண்டுவிடில்
பினைச்சென்மம் நீங்காது பிரமானுபவமலவே.

4. தன்னைவிடவேயொன்றுந் தாலில்லாத்
தன்னிடத்தில்
தன்னினை விஞலே சகம்போலத் தோன்றிடுமே.

5. மந்தவிரு ளிற்கயிறு மாசுணம் போற்
ருேன்றுதலின்
இந்தவுல கென்னிடத்தில் இலகும்ஆ
ரோபிதமாய்.

6. பழுதையினின் ருேர்சத்தி பாம்பு போல்
தோன்றுதற்குப்
பழுதையினுண் டதைப்போலப் பரத்தினுமுண்
டோர்சத்தி.

7. சூனியஞ்சித் துப்பிரமம் சுத்தசிவம் பரம்என்று
தானிகழ்தல் வேறில்லை தனக்கே பரியாயம்.

8. உலகமுயிர் பரமென்று உரைத்திடும் மூவகைப்
பொருளும்
இலகவே யாஞக என்னனுபூ தியிற்கண்டேன்.

9. எனைத்தவிர வேருென்றும் இல்லையெனக்
கண்டளவில்
பினைத்தவிப்பு நீங்கிப் பிரமமா யேயிருந்தேன்.

10. செகமதையுந் தான் விழுங்கிச் சீவனையும்
உள்வாங்கி
அகமதுவும் புறமும்இலா அகண்டமாய்
நின்றனமே:

11. தெருள்விழியோர் துணிவிதெனத் தேர்ந்தனுபூ
தியிற்கொள்வர்
மருள்விழியோர் திரிவில் இதை மாயாவாதம
தென்பர்.

**14. ஸ்ரீ பெரியநாயகியம்மன் ஞானோபதேசப்பதிகம்**

**ஸ்ரீ குமாரதேவசுவாமிகள் தமக்கு விருத்தாசலம், ஸ்ரீ பெரியநாயகியம்மன் தத்துவமசி மகாவாக்கிய ஞான உபதேசம் கூறியதைக் கூறுகின்றார்.**

எழுசீர் ஆசிரிய விருத்தம்.

1. விரிவுறும் உருவ நாமம தகற்றின்
விடயங்கள் விளங்குரு விதனால்
மருவுறு பொறிபோம் பொறியறக் கரணம்
மாய்ந்துறும் கரணம்மாய் தலினால்
புருடன்முன் னேமும் சுத்தமோர் ஐந்தும்
போம்இதால் சச்சிதா னந்தம்
கிரியையற் றிலங்கும் என்றனள் விருத்த
கிரியமர் பெரியநா யகியே.

2. உளப்படும் உருவம் நாமம தகற்றின்
உள்ளசற் சிற்சுகம் தோன்றும்
வளப்படும் இதனால் உலகுகண் ணாடி
வரும்நிழல் ஆம்நிழல் மறிந்தால்

விளக்குறும் ஞான வெளியதாம் இதனின்
விளையும் இன்(பு) எனவெனக் கிசைத்தாள்
கிளக்குறு தவத்தோர் தரித்துரை விரித்த
கிரியமர் பெரியநா யகியே.

3. பழுதையென் றுணரில் தன்முனர்த் தோன்றும்
பாம்பும் அப் பழுதையாம் அதுபோல்
முழுதுணர் அறிவாம் தன்னையே காணின்
முரண்உறு சராசரம் எவையும்
எழுதரும் அறிவாய் விளங்குமென்(று)
இசைத்தாள்
எழுபவம் துடைத்(து) எனை அளித்த
கெழுமணி முத்த நதிசெறி விருத்த
கிரியமர் பெரியநா யகியே.

4. சொருபமே தான்என்(று) உணர்தரில் பரனும்
துகளுறு சீவனும் சகமும்
மருவுதன் நினைவில் எழுந்தமித் தைக(ள்)ஆம்
வந்திடு பந்தம்வீ(டு) இலவாம்
ஒருவுயிர் தான்என்(று) உணரி(ல்) அம் மூன்றும்
உளபந்தம் வீடு(ம்) உண்(டு) என்றுள்
கிரிதவப் பயனும் வரும்ஒரு விருத்த
கிரியமர் பெரியநா யகியே

5 அறிபொருள் அறிவோன் அறிவினைக்
கொடுப்போன்
ஆனமுப் பொருளும் ஓர்விடயம்
பொறியுறப் பிடித்தால் உளஇதை விடுத்(து) ஓர்
பொருளைநா டுதல்முனர் இடையே

பிறிவறத் தோன்றும் சொருப(ம்) இந் நிலையில்
பேசு(ம்) முப் பொருள்களும் இலவாம்
கிறியற அறிதி என்றனள் விருத்த
கிரியமர் பெரியநா யகியே.

6. அரவிலை பழுதை உணர்ந்தவர்க்(கு) அதுபோல்
அகிலமெய்ப் பொருளினை உணர்ந்தோர்க்(கு)
ஒருவுரு(து) இருத்தல் எனை எனில் கானல்
உறுசலம் இலை என உணர்ந்தும்
மருவலின் நாநா விகார(ம்) ஏ(து) என்னின்
மலிகன வினில் உறும் என்றுள்
கிருது செய் மறையோர் பரவிய விருத்த
கிரியமர் பெரியநா யகியே.

7. தடத்தில்மற் றதனில் தயங்குபல் கடத்தில்
சாயையும் சாயையில் லதுமாய்த்
திடத்தொடும் விளங்கும் விசும்புபோல் ஈசன்
சீவன் இங்(கு) இருவர்சாட் சிகளாம்
இடத்துறும் பிணையில் தோன்றுறும் சிவம் இங்(கு)
இருவர்சாட் சிகளும் ஒன்(று) என்றுள்
கிடைத்தநன் னிதியாய் எனக்குறும் விருத்த
கிரியமர் பெரியநா யகியே.

8. ஆருயிர் தானும் அவன்மனம் தைச(த)
அகங்கரத்(து) உதித்தது ஆகும்
பேருயிர் சாட்சி யானவன் மனமோ
பின்னையாம் ஆதலால் அவற்குக்
கூருறும் உலகம் மயக்கமாம் இவற்குக்
குறித்ததன் லீலையாம் என்றுள்
கீரனை அளித்தோர்க்(கு) உவந்ததாய் விருத்த
கிரியமர் பெரியநா யகியே.

9. ஓதுறு நாமம் அகற்றிடில் தோன்றும்
உள்ளசற் சிற்சுகம் இதுவே
தீதறு சீவ சாட்சியிங்(கு) இதனைத்
†தெருந்திடும் சீவனும் இதுவாம்
ஏத(ம்) ஒன்(று) இல்லாப் பிரம்மமாம்
என்(று) என்
இருள்அற அருள்புரிந்(து) அளித்தாள்
கேத(ம்) இல் தவத்தோர் சூழ்தரும் விருத்த
கிரியமர் பெரியநா யகியே.

†தெருந்திடும் — தெளிந்திடும்

10. எஞ்சுறும் உளத்தோ(டு) என்னையார் என்றே
இரங்கியே திரிந்துழல் வேனை
மஞ்சு (உ) றழ் காத்துக் கன்னனைக் குந்தி
மகனென உணர்த்துதல் ★கடுப்ப
அஞ்ச(ல்) என்(று) அழைத்து †நீ அது ஆகும்
ஐய(ம்) இன்(று) என்னவே அளித்தாள்
கிஞ்சுக வாயால் உஞ்சிட விருத்த
கிரியமர் பெரியநா யகியே.

★கடுப்ப = போல. †நீ அது—அதுநீ என்னும் "தத்துவம்அசி" மகாவாக்கிய உபதேசம். இந்தத் "தத்துவம் அசி" மகாவாக்கியம் சாமவேதம்-சாந்தோக்கிய உபநிஷத்துக் கூறும் உபதேச மகாவாக்கியம் ஆம்.

15. சிவபோகசாரம் (ஸ்ரீ குரு ஞான சம்பந்த சுவாமிகள்)

1. அகத்தை இழந்தருளாய் அவ்விடத்திற் றேன்றும்
சுகத்தில் அழுந்திவிடச் சொன்னான்—மகத்தான்
சிற்பரனு ரூர்தனில்வாழ் செங்கமலப் பொற்பாதன்
தற்பரஞா னப்பிரகா சன்.

2. தன்னை இழந்திடத்தே தானே சுகவடிவாய்
இன்னபடி என்றறறியா எங்கோனும்—பின்னமற
நின்றநிலை தானுந் தெரியாதே நின்றவர்கட்
கன்றே பிறப்பறுக்கல் ஆம்.

3. அறிவுநீ என்ன அறிந்தறிந்து மாயைச்
செறிவுநான் என்றென்று சேர்ந்தால்—அறிவு
தெரிந்திடுமோ, இன்பசுகம் சேர்ந்திடுமோ, நின்னைப்
பிரிந்திடுமோ ஜென்மப் பிணி.

4. வாக்குமனக் காயத்தான் வந்தபொருள் அத்தனையும்
வாக்குமனக் காயமுடன் மாயுமே—வாக்குமனக்
காய முடனிழந்து காண்ஞா திருஞான
ஞேயம் இழந்த நிலை.

5. ஈசன் அடியில் இருக்கையிலே எங்கெங்கும்
ஈசனடி தேடி இளைத்தேனே!—பேசரிய
பொற்பதத்தன் செங்கமலப் பொற்பாதன் றன்னுடைய
நற்பதத்தைக் காணுமுன் நான்.

